

ஜலதோஷம் பிடித்தால்
குழந்தையின் உறக்கம் நாசம்

# விக்ஸ் வேபரப்பினால் இரவோடிரவாக சுகம்

(அவ வேலையைச் செய்வது அன்னையின் பாசம்)

ஜலதோஷம்—அதனால் பாதிக்கப்பட்டவரே அதன் தொல்லையை அறியமுடியும் : உறங்க முடியாது...மூக்கடைப்பு...சளி...இருமல்... உடல் முழுவதும் வலி...இவ்வளவையும் பாவம் குழந்தை தாங்க முடியுமா ?

மாதாவின் மந்திரக் கரம் அறியுமே ஜலதோஷத்தின் நிவாரணத்தை. அப் பாசக்கரம் தொடுவது விக்ஸ்...அதை குழந்தையின் மூக்கு, தொண்டை, நெஞ்சு ஆகியவற்றில் அன்புடன் இதமாகத் தடவுகிறாள் அன்னை...அதிலும் முக்கியமாய் முதுகிலே ! அப்படித் தடவாவிட்டால் அம் முயற்சி முழுவதும் அரை குறையாகிவிடும்.

தாயின் பாசம் குழைத்துத் தடவப்படும் விக்ஸ், இரட்டைச் செயல் புரிகிறது: ஒன்று, மருந்து கலந்த (மெடிக்கேட்டட்) இதன் ஆவி மூக்கடைப்பை நீக்குகிறது. இரண்டு, சருமத்தில் தடவப் படுவதால் உடல் வலியைப் போக்குகிறது. அன்பும் பாசமும் இணைந்த அன்னையின் விக்ஸ் சிகிச்சையால், குழந்தை அயர்ந்து உறங்குகிறது விடியும் வரை.. முன்புபோலவே குழந்தை ஆரோக்கியமும் சுறுசுறுப்பையும் அடைகிறது !






**விக்ஸ்
வேபரப்.**

சுவாச நிவாரணம் அளிக்கிறது
நிவாரண அனுபவத்தை
உணரவைக்கிறது

-VR6-1810 TAM



1. 1984-ம் ஆண்டை 'சேவை' ஆண்டாகக் கொண்டாடுகிறார்கள். அந்த வகையில் 'சத்திய சாயி சேவா நிறுவனம்' இந்தியா முழுவதும் சுமார் ஆறுயிரம் கிராமங்களைத் தத்தெடுத்து கிராம வளர்ச்சிக்குச் சேவை செய்யப் போகிறதாம். ஜனவரியில் சென்னைக்கு வந்த ஸ்ரீ சத்ய சாயி பாபா தமிழகத்தில் அந்தப் பணியைத்துவக்கி வைத்தார். நந்திவரம் கிராமத்தில் தொழிற்பயிற்சிக் கூடத்தைத் துவக்கி வைத்தார்.

# PHOTO

2. டைப்ரைட்டரில் ஓவியம் வரைகிறார் சீனிவாசன். டைப்ரைட்டரில் உள்ள கோடுகள் புள்ளிகளின் வழியாகக் காந்தியிலிருந்து தியாகராஜர் வரை மலருகின்றனர். ''ஒரு ஓவியனின் கற்பனைத் திறன் வெளிப்பட வண்ணமும், தூரிகையும் தான் வேண்டும் என்ற அவசியமில்லை!'' என்கிறார் வழக்கறிஞரான சீனிவாசன்.



3. பத்து வயது ஆர்த்தி, திரு. காமேஸ்வரன், திருமதி. காமேஸ்வரனிடம் நாட்டியம் பயின்றவள். நாட்டியத்தில் ஆர்வமும், உழைக்கும் திறனும் இருப்பதை இவளிடம் காண முடிகிறது.



4. சென்ற மாதம் சென்னைவாசிப் பெண்களிடையே ஓரே பரபரப்பு. ஆவின் பாலால் செய்யப்படும் பண்டங்களுக்குப் போட்டி வைத்திருந்தார்கள். ஐநூறுக்கும் மேற்பட்ட பெண்கள் தாங்கள் செய்த பண்டங்களை எடுத்துக் கொண்டு வந்து விட்டார்கள். தி. நகர் விஜயாவிற்கு முதற் பரிசான டி. வி. யும், திருமதி பங்கஜா இர்பென்னுக்கு இரண்டாவது பரிசாகத் திருவனந்தபுரம்வரை விமானத்தில் இலவசமாகப் போய் வரும் பரிசும், திருமதி. பத்மாவிற்கு மூன்றாவது பரிசாக சுமித் மிக்ஸியும் வழங்கப்பட்டன. இது தவிர இருபத்தைந்து பேருக்கு ஆறுதல் பரிசாக ஆறு மாத மங்கையர் மலர் அனுப்பப்படும் என அறிவிக்கப்பட்டது.

# NEWS

# எஸ்.அம்புஜம்மாள்

ஸ்ரீ வேணுகோபாலன்

எந்தப் பெண்ணாவது தன்னைப் போலீஸ் கைது செய்யவில்லையே என்று அழுவாளோ?

குறிப்பாக வசதி மிக்க குடும்பத்தில் பிறந்த ஒரே ஒரு செல்லப் பெண்!



இருந்தும் அந்தக் காரியத்தைத் தான் செய்தார் அம்புஜம்மாள்!

அவருக்கு அப்போது வயது முப்பது இருக்கும்.

நாட்டில் ஆங்கிலேயருக்கு எதிராக எழுந்த பெரிய தேசிய அலையில் எத்தனையோ ஆண் பெண்களைப் போல் அவரும் தம் மனத்தைப் பறிகொடுத்திருந்தார்.

அன்னியத் துணி நிராகரிப்பிலும், கதர் பிரச்சாரத்திலும் அவர் ஈடுபட்டிருந்தார்.

காங்கிரசில் பெண் அணியில் சேர்ந்து வீடு வீடாகச் சென்று சுதேசிப் பொருள்களை வாங்கும்படி பிரசாரம் செய்தார்.

வெளிநாட்டுத் துணி விற்கும் கடையில் மறியல் செய்யும் போது போலீசார் எத்தனையோ பேர்களைக் கைது செய்து சென்றார்கள்.

ஆனால் யாரும் அம்புஜம்மாளைத் தொடவில்லை. அவரைக் கைது செய்யாததற்குக் காரணமும் இருந்தது.

அவரது தந்தை எஸ். சீனிவாச ஐயங்கார் பிரபல அட்வகேட். புகழ் வாய்ந்தவர். சென்னை ராஜதானியில் அட்வகேட் ஜெனரலாக இருந்து தேசிய எழுச்சி காரணமாக அதை உதறித் தள்ளியவர்.

**வழிகாட்டும் பெண்மணிகள்-5**

பிரிட்டிஷ் அரசாங்கம் அளித்த சர் பட்டத்தையும் 'பூ' என்று உதறியவர். தென்னாட்டுச் சிங்கம் என்று பெயர் பெற்றவர். காங்கிரசில் பெரும் ஈடுபாடு கொண்டு 1920—ல் அதன் தலைவராகவும் இருந்தவர்.

இவ்வளவு பிரபலமானவரது செல்லப் பெண்ணைப் போலீசார் கைது செய்வார்களா?

சென்னை ஜியார்ஜ் டவுனில் செல்லாராம்ஸ் துணிக்கடை முன் மறியல் செய்யும்போது தான் அம்புஜம்மாள் கைது செய்யப்பட்டார். எவ்வளவு மகிழ்ச்சி அவருக்கு? அதை ஒரு மகத்தான சம்பவமாகக் கருதினார். அவர் மீது வழக்குத் தொடரப்பட்டது. ஆறு மாதம் சிறைவாசம் விதிக்கப்பட்டது. வேலூர் சிறையில் அவர் வைக்கப்பட்டார். அது ஆறு மாதத்தில் முடிவடைந்தது.



அதற்குள் அம்புஜம்மாள் மனத்தில் தியாக ஆர்வம் கூடிவிட்டது.

சீக்கிரமே காந்திஜியின் சேவாக்கிராம ஆச்ரமத்துக்குப் போக வேண்டும் என்று நினைக்க ஆரம்பித்தார்.

தென்னாப்பிரிக்காவிலிருந்து காந்திஜி இந்தியாவுக்கு 1915—ல் வந்தார்.

அவருக்குத் தமிழ் மக்கள் மீது ஒரு ஈடுபாடு. ஏனெனில் அவர்கள்தான் தென்னாப்பிரிக்காவில் அவரது சத்யாக்கிரகத்துக்கு உறுதுணையாக இருந்தார்கள்.

எனவே, சென்னைக்கு ஒரு அபிமானத்தோடு அவர் வர, அவருக்கு சீனிவாச ஐயங்கார் வீட்டில் ஒரு பார்ட்டி கொடுக்கப்பட்டது. அப்போது அம்புஜம்மாளுக்குப் பதினைந்து வயது இருக்கும்.

அவருக்கு ஒரே பரபரப்பாக இருந்தது. ஏனெனில் காந்திஜி தித்திப்பு, தேநீர் எதையும் அருந்தப் போவதில்லை, அவருக்கு வெறும் வேர்க்கடலையும், ஆட்டுப்பாலும் தான் அளிக்கப்பட இருந்தது என்பதை அறிந்து கொண்டிருந்தார். அது அம்புஜத்திற்கு வேடிக்கையாக இருந்தது. அந்த ஆசாமி எப்படி இருப்பார் என்பதை அறிய அவாவோடு இருந்தார்.

எளிய உடையில் காந்திஜி வந்து பார்ட்டியில் அமர்ந்தபோது, அம்புஜம் வீட்டின் உள் அறையிலிருந்து எட்டிப் பார்த்தார்.

அந்நாளைய சம்பிரதாயப்படி பெண்கள் ஆண்கள் இருக்குமிடம் வர மாட்டார்கள்.

காந்திஜியைப் பார்த்ததுமே அம்புஜம்மாளுக்குப் பரவசமாகி விட்டது. அவர் மீது அந்தக் கணமே ஒரு அன்பும் பக்தியும் தோன்றிவிட்டது.

பார்ட்டி முடிந்ததும், அம்புஜத்தின் வற்புறுத்தல் மீது சீனிவாச ஐயங்கார் அவளை காந்திஜியிடம் அழைத்து வந்து அறிமுகப் படுத்தினார்.

காந்திஜி சிரித்துச் சில வார்த்தைகள் பேசினார்.

அம்புஜம்மாள் ரொம்பவும் குதூகலம் அடைந்தார். அந்தக் கணத்திலிருந்து அவள் காந்தி பக்தையாக மாறி விட்டாள்.

1899—ல் பிறந்தவர் அம்புஜவல்லி.

அந்நாளில் பெண்கள் படிப்புக்கு அவ்வளவு முக்கியத்துவம் இல்லை. எனினும் அப்பா சீனிவாச ஐயங்கார் தமது வீட்டுக்கு உபாத்தியாயரை வரவழைத்துப் பெண்ணுக்கு ட்யூஷன் சொல்லிக் கொடுத்தார்.

பதின்மூன்று வயதாகியதும் அம்புஜவல்லிக்கு வரன் தேட ஆரம்பித்தார் அவரது தந்தை.

ஒரு அறிவாளியான பிள்ளையைத் தேடினார். பிரஸிடென்ஸி கல்லூரியில் ஒரு சிறந்த படிப்பாளி மாணவனைத் தேர்ந்தெடுத்தார். பெயர் தேசிகாச்சாரி.

திருமணம் நடந்தது.



Ambujam has given me the costly jewels which you have permitted her to donate in the sacred memory of the deceased patriot. I have decided to devote the proceeds to founding Harijan scholarships.

Love
Bapu

அம்புஜம்மாளின் தந்தைக்கு காந்திஜி எழுதிய கடிதம்

நான்கு வருடங்கள் குடும்பமும் நடந்தது. அதன் பின் தேசிகாச்சாரிக்கு மனசம்பந்தமாகச் சில சுகக் குறைவுகள் ஏற்பட்டன. நிறைய வைத்தியம் செய்தார்கள். மாந்திரிகமும் கையாளப்பட்டது. தேசிகாச்சாரிக்கு சில அடக்க முடியாத செயல்கள் கட்டுப் பட்டுப் போயின. இருந்தும் பூரண குணம் ஏற்படவில்லை.

தந்தையே நாட்டுச் சேவையில் இறங்கி விட்டார். காந்திஜியின் தரிசனம் வேறு அம்புஜத்தின் மனத்தில் ஒரு நிலை மூட்டி விட்டது. இந்த நிலையில் குடும்பத்தை விட நாட்டுக்குத் தன்னை அர்ப்பணிப்பது தான் சிறந்த காரியம் என்று அவருக்குத் தோன்றி விட்டது.

முழு மூச்சுடன் தேசிய வெள்ளத்தில் இறங்க ஆரம்பித்தார். சமூக சேவை அவரது முக்கிய குறிக்கோள். மாதர் அணிகள் ஏற்படுத்தி விடு வீடாகக்கதர் பிரசாரத்தில் ஈடுபட்டார். கைவண்டியைத் தாமே தள்ளிப் போய் கதர் வியாபாரம் நடத்தினார். கூட்டங்கள் போட்டு அன்னியத் துணிகளை நிராகரிக்கும்படி வேண்டிக்கொண்டார்.

இந்த நிலையில் காந்திஜியின் சபர்மதி ஆசிரமத்தில் தங்கி இருக்க வேண்டுமென்று ஆர்வம் உதித்தது.

அந்தச் சமயத்தில் தந்தை சீனிவாச ஐயங்காருக்கும் காந்திஜிக்கும் இடையே கொள்கை அளவில் சற்று வித்தியாசங்கள் தோன்றியிருந்தன.

காங்கிரசின் தலைவராக இருந்து கொண்டு ஆர்வத்தோடு தேசியத் தொண்டில் ஈடுபட்டிருந்த சீனிவாச ஐயங்கார் சிறிது அளவு அப்போது ஒதுங்கி இருக்கும் ஒரு நிலையில் இருந்தார்.

ஆனால் பெண் அம்புஜம்மாளின் வற்புறுத்தல் அதிகமாகவே அவளை சபர்மதி ஆசிரமத்துக்கு அவர் அனுப்பி வைத்தார். துணைக்காகத் தமது மனைவியையும் அனுப்பினார்.

சபர்மதியில் காந்திஜியைக் கண்ட அம்புஜம்மாள் மற்றொரு மகத்தான காரியத்தைச் செய்தார்.

யாராவது பெண்மணி 40 ஆண்டுகளுக்கு முன் தன் நகைகளைக் கழற்றி சமூக சேவைக்காகக் கொடுப்பார்களா?

அதுவும் ஒரு நகை, இரண்டு நகை அல்ல! நாற்பதினாயிரம் ரூபாய் பெறுமான (40 வருடங்களுக்கு முன்னால்) முன்ன வைர தங்க நகைகள்! எல்லாவற்றையுமே கழற்றி காந்திஜியிடம் அர்ப்பணித்தார்.

அம்புஜம்மாளை காந்திஜி தமது செல்வப் பெண் என்று கூறினார்.

ஆசிரமத்தில் சிறிது காலம் தங்கிய பின்னர், காந்திஜியிடம் விடைபெற்று அம்புஜம்மாள் சென்னைக்குத் திரும்பி வந்தார்.

மேலும் பன் மடங்கு ஆர்வத்தோடு சேவைகளில் ஈடுபட்டார். டாக்டர். முத்து லட்சுமி ரெட்டியுடன் பழக்கம் ஏற்பட. 'இந்திய மாதர் சங்க'த்தில் காரியதரிசியாக

# இதோ எளிதில் உபயோகிக்கக்கூடிய ஒரு ஹேர்-டை, மிகமிகக் குறைந்த விலையில்!

**கோ**த்ரெஜ் பவுடர் ஹேர் டை கான்ஸென்ட்ரேட் உங்களுக்காகவே விசேஷமான கலவை முறையில் தயாரிக்கப்படுகிறது.
இந்தியாவில் பவுடர் ஹேர் டை கான்ஸென்ட்ரேட் இது ஒன்றே. இது தானாகவே பரவுகிறது. ஆகவே நீங்கள் சிறிதளவே உபயோகித்தால் போதும்! மிகமிக முக்கியம், நீங்கள் நம்பமுடியாத அளவுக்கு குறைவான விலையில் இது கிடைக்கிறது!





**கலப்பது சுலபம்**
இந்தப் பவுடரை சிறிதளவு நீருடன் கலக்கவும். உபயோகிப்பதற்கு இப் போது தயார்.



**உபயோகிப்பது சுலபம்**
இதை சிரமமின்றி இலேசாகத் தடவுங்கள். தானாகவே ஒரே சீராக, மென்மையாக முடிமீது பரவி விடுகிறது.
உங்கள் கேசத்துக்கு இளமையான அழகுத் தோற்றத்தைத் தருகிறது!




இந்தியாவில் தானாகவே பரவும் பவுடர் ஹேர்-டை இது ஒன்றே.

## Godrej
## பவுடர் ஹேர்-டை கான்ஸென்ட்ரேட்

CLARIAN/GS/11/203 TAM

**தரமோ நீங்கள் நாடுவது விலையோ உங்களுக்குப் பிடித்தமானது.**

பண்டைக்காலம் முதல் பிரசித்தமான கிராம்புத் தைலத்தின் குணதிசயங்களின் பயனைப்பெற ஆயிரக் கணக்கான குடும்பங்கள் இப்பொழுது

# கிராம்புத் தைலம்

கொண்ட

# ப்ராமிஸ்

உபயோகிக்கிறார்கள். நீங்களும் உபயோகியுங்கள்







**ப்ராமிஸ்**

- பற்சிதைவிலிருந்து பாதுகாக்கிறது.
- வாய்க்குப் புத்துணர்ச்சி தருகிறது.
- துர்நாற்றத்தை அகற்றுகிறது.






சர்வதேச கோல்ட் மெடல் பெற்ற தயாரிப்புகள்

ஆரோக்கியமான பற்கள்,
ஈறுகள் மற்றும் புத்துணர்ச்சி மிக்க மூச்சு

பல்ஸாரா தயாரிப்பு

CHAITRA-BLS-668 TAM

இருந்து தேவதாசி ஒழிப்பு, இருதார மணத்துக்குத் தடை, விதவா விவாகம், போன்ற பெண்களுக்குத் தேவைப்படுகிற சீர்திருத்தச் சட்டங்களுக்கு வேண்டி அவர் அயராது உழைத்தார்.

1941-ல் சீனிவாச ஐயங்கார் மரணம் அடைந்தார். காந்திஜி அம்புஜம்மாளுக்கு ஆறுதல் சொல்லிக் கடிதம் எழுதினார்.

1948-ல் காந்திஜி மரணம் அடைந்ததும் அம்புஜம்மாளுக்குத் தமது இரண்டாவது தந்தையை இழந்தது போலிருந்தது.

இருவரின் நினைவாக 'சீனிவாச காந்தி நிலையம்' என்கிற பெயரில் ஒரு சேவை நிறுவனத்தைத் துவக்கினார்.

அதில் பெண்களுக்கு உதவி செய்யும் வகையில் எல்லாவிதப் பணிகளையும் மேற்கொண்டார். ஏழை எளிய பெண்களுக்குத் தாமே திருமணம் செய்து வைக்கக் கூட உதவினார். பெண்களுக்கு சுயவேலைக்காகத் தொழிற்பயிற்சிகள் பலவற்றை மேற்கொண்டார்.

1957-ல் திருமதி. துர்க்காபாய் தேஷ்முக் இடமிருந்து ஒரு அழைப்பு வந்தது. அதை ஏற்றுக் கொண்டு மாநில சமூகநல நிறுவனத்தின் தலைவியாகப் பொறுப்பேற்றார்

1955-ல் ஆவடியில் நடந்த அகில இந்திய காங்கிரஸ் மகாநாட்டை நம்மில் பலர் மறந்திருக்க மாட்டார்கள்.

அதில் வரவேற்புக் கமிட்டியின் தலைவராக இருந்து மகாநாட்டைச் சிறப்பாக நடத்தி வைத்த பெருமை அம்புஜம்மாளைச் சேர்ந்ததாகும்.

வினோபா பூதான இயக்கத்திற்காக வந்த போது அவருடன் சேர்ந்து அம்புஜம்மாளும் பாத யாத்திரை போனார்.

எளிய உடை, இனிமையான பேச்சு, எப்போதும் உதவி செய்கிற சுபாவம், எல்லாவற்றையும் விட ஒரு அதிசயமான தியாக மனம், இவ்வளவும் நிரம்பப் பெற்றவர்தான் அம்புஜம்மாள்.

தமது 84-வது வயதில் சென்ற ஆண்டு அக்டோபர் மாதம் அவர் காலமானபோது சமூக நலத்துக்கே அர்ப்பணமான ஒரு வாழ்க்கை அஸ்தமித்து விட்டதே என்று கண்கலங்கி அழுதவர் நிறைய பேர்.

முப்பது ஆண்டுகளுக்கு மேல் அவருக்கு காரியதரிசியாகவும், ஒரு பெண் போன்றும் இருந்து வந்தவர் பாலம்மாள் என்பவர்! அவரும் இன்னும் பல பேர்களும் சேர்ந்து அம்புஜம்மாள் செய்து வந்த சேவைகளை சீனிவாச காந்தி நிலையத்தின் மூலம் தற்சமயம் செய்து வருகிறார்கள்.

அம்புஜம்மாளின் ஒரே பிள்ளை இப்போது அவர் வீட்டில் வாழ்ந்து வருகிறார்.

---

# இதற்கு என்ன செய்வது?

தொகுப்பு: டி. ஆர். ரமேஷ்



**ஆர். நிர்மலா** பழையனூர்

**கேள்வி**

நான் ஒரு படித்த இளம்பெண். கிராமத்தில் வசிக்கிறேன். என்னுடைய ஓய்வு நேரத்தைப் பயனுள்ளதாகவும், வருவாய் தருவதாகவும் அமைத்துக் கொள்ள விரும்புகிறேன். ஆண்களைச் சார்ந்து இல்லாமல் பெண்கள் சுயமாக, சிறு மூலதனம்கொண்டு ஏதாவது செய்ய முடியுமா? இதற்கு யாரை அணுக வேண்டும், விவரம் தேவை.

**பதில்**

இப்போது கிராமப்புற மேம்பாட்டிற்காகவே அரசு ஒரு துறையை ஏற்படுத்தி, அமைச்சரையும் நியமியுள்ளது. இதுதவிர 'பெண்கள் முன்னேற்றக் கழக'மும், ஆரம்பிக்கப்பட்டுள்ளது. இவற்றின் கீழ் பெண்களுக்குச் சுயவேலை வாய்ப்பிற்கும், தொழிற் பயிற்சிக்கும் வாய்ப்புக்கள் உள்ளன. உங்கள் ஊராட்சி ஒன்றியத்தை அணுகி விவரங்கள் கேட்கவும்.

**லலிதா** செங்கற்பட்டு

**கேள்வி**

என் கணவர் 2 வயது குழந்தைப்பருவத்திலிருந்து தன் சிற்றன்னைக்குக் குழந்தைகள் இல்லாத காரணத்தால் தத்து எடுத்து வளர்க்கப்பட்டார். அவர்கள் மீதுள்ள ஆழ்ந்த நம்பிக்கை காரணமாகத் தத்து எடுத்ததைப் பதிவு செய்தோ, சடங்கு செய்தோ, தத்து எடுக்கவில்லை. இது உறவினர்கள், அக்கம் பக்கத்து நண்பர்கள் அனைவரும் அறிந்த செய்தி. சிற்றன்னையின் கணவர் (சித்தப்பா) இறந்து விட்டார். சித்தப்பாவிற்கு முதல் மனைவியின் (உயிருடன் இல்லை) மகள் மட்டும் இருக்கிறாள். சித்தப்பா விட்டுப் போன வீடு, நிலம் இவைகளில் என் கணவருக்கு எந்தப் பாகமும் இல்லாமல் செய்து விட்டார்கள். நியாயம் வெல்ல நாங்கள் என்ன செய்யவேண்டும்?

**பதில்**

உங்கள் கணவர் சிற்றப்பாவின் வளர்ப்பு மகன்தான் என்பதைச் சாட்சியங்கள் கொண்டு கோர்ட்டில் நிரூபிக்க வேண்டும். அதற்காகக் கடிதத்தில் குறிப்பிட்டுள்ளபடி கடிதங்களில் 'தன் மகன்' எனக் குறிப்பிட்டதோ, ரயில்வே பாஸோ போதாது. உறவினர்களைக் கொண்டு கோர்ட்டில் நிரூபித்தால், மகனுக்குரிய சொத்து வந்து சேரலாம். ஆனால் தத்து எடுத்துக் கொண்டதைப் பதிவு செய்திருக்க வேண்டும். அல்லது 'தத்த ஹோமம்' செய்யப்பட்டிருக்க வேண்டும். இரண்டும் இல்லையென்பதால் உங்களுடைய சாட்சியங்களின் மூலமே நிரூபிக்கப்பட வேண்டும்.

**சித்ரா** சென்னை - 16

**கேள்வி**

நான் ஒரு விதவை. என் வயது 35. குழந்தைகள் இல்லை. எனக்குப் பாங்கில் பணம் இருந்தும் நிம்மதியில்லை. வீட்டிலே குடும்பத் தொல்லை. நான் தனியாக வசிப்பதற்கு கவர்ன்மெண்ட் ஹாஸ்டல்கள் ஏதாவது இருக்கிறதா? எனக்குத் தனிமைதான் மிகவும் பிடிக்கும். என் வாழ்வு மலர ஒரு வழி சொல்லுங்கள்.

**பதில்**

உங்கள் வாழ்வைப் பயனுள்ள வகையில் கழிக்கப் பல சமூக சேவை நிறுவனங்கள் உள்ளன. சென்னை கிழக்குத் தாம்பரத்திலுள்ள 'எஸ். ஓ. எஸ்.' கிராமம்' போன்றவை உங்களுடைய வாழ்வைப் பயனுள்ள வகையில் மலர உதவும். உங்களைப் போன்றவர்களால், பல ஆதரவற்ற உள்ளங்களுக்கு அன்பைத் தர முடியும். ஏக்கம் சூழ்ந்த

பரிசு பெற்ற குறிப்புக்களைத் தேர்ந்தெடுத்தவர்கள்

**ஸ்ரீ லக்ஷ்மி மாதர் சங்கம்,**
**ஆழ்வார் திருநகர், சென்னை-87.**

# இம்மாத இல்லத்தரசி

முதல் பரிசு: எவர்சில்வர் டிரம்

**டோக்ளா**

**தேவையான பொருட்கள்:**

பச்சரிசி – 2 கப்,
கடலைப் பருப்பு – 1 கப்,
மோர் – 1 கப்,
சமையல் சோடா – அரை டீஸ்பூன்.



● நுங்களுடைய இலவச இணைப்பில் இயல் 4—ல் ''பயம்'' என்ற பகுதியில் வெளியிடப்பட்ட கருத்து எங்களை மிகவும் கவர்ந்தது. எங்களைக் கவர்ந்து என்னபயன். இது மருத்துவர்களுக்கும், செவிலியருக்கும் அல்லவா தெரிந்திருக்க வேண்டும்? அரசாங்க மருத்துவமனைகளில் ஏழைகள் பாடு திண்டாட்டம்தான். டாக்டர்கள், நர்ஸ்கள் அலட்சியப் போக்கு கொஞ்சநஞ்சம் என்று சொல்ல இயலாது.

ப.வை. கமலவேணி. மயிலாடுதுறை—2.

● ''நன்றி'' என்று நாம் சொல்லும் வார்த்தைக்கு இவ்வளவு ஆழமான கருத்து இருக்கிறது என்பதை ஆங்கில மூதாட்டியிடம் கேட்டு, அறிந்ததை முதல் பரிசாகத் தேர்ந்தெடுத்ததில் வியப்பில்லை.

கோதை சுந்தரம் சென்னை—86.

● ''வாழ்க்கையில் நான் கற்ற பாடம்'' பகுதியில் திருமதி. விஜயா ராமகிருஷ்ணன், எழுதிய கடிதத்தைப் படித்த பின்பு என்னிடமுள்ள தைரியமற்ற குணத்தை மாற்றிக் கொள்ள முயலுவேன். அவர் எழுதிய கட்டுரையை இதுவரையில் நான் ஒரு 15 (அ) 20 பேரிடமாவது படித்துக்காட்டி விருப்பேன். அதை நான் கத்தரித்து பொக்கிஷமாகவும் வைத்திருக்க விரும்புகிறேன். அவருக்கு இருந்த தைரியத்தையும் சமயோசித புத்தியையும் கடவுள் எல்லாப் பெண்களுக்கும் அளிக்குமாறு வேண்டிக் கொள்கிறேன்.

கல்பறு சேலம்—1

● வை. மு. கோதைநாயகியின் வாழ்க்கைச் சரித்திரம் அற்புதம். அந்தக் காலத்திலேயே (1931) கள்ளுக்கடை மறியலில் ஈடுபட்டாராமே! அவரது துணிச்சலை எண்ணி வியந்து போகிறேன். வை. மு. கோதைநாயகியைப்




பற்றிப் பல விஷயங்களைத் தெரிந்து கொள்ள உதவிய ஸ்ரீ வேணுகோபாலன் அவர்களுக்கு மிக்க நன்றி.

வெங்கட் மடிப்பாக்கம்

● ''பிப்ரவரி இலவச இணைப்பு தாய்மை அடையும் மங்கையர்க்கு மனவலுவையும், உடல் வலுவையும் தரும் பயனுள்ள படைப்பு என்பதில் ஐயமில்லை.

பீ. ஷஃபானத் ஸாலி தக்கலே.

● பெண் இனமே பெருமை கொள்ளும் வகையில் சேவையாற்றி வரும் சென்னை ஜெனரல் சூப்பிரண்டெண்ட் திலகவதியின் கடமை உணர்ச்சியைப் பாராட்டாமல் இருக்க முடியவில்லை.

நிதம்பரச்செல்வி வேலூர்.

● ''பெண்களின் சில நிரந்தரப் பிரச்சினைகளுக்குத் தீர்வு காணும் வகையில் அமைந்து வருகிறது. பெண்களின் சில நிரந்தரப் பிரச்சினைகள் பகுதி.''

கே. வளர்மதி மீனாட்சி நாகப்பட்டினம்—1.

● தேவுவை நினைக்கும் போது பரிதாபம் ஏற்படுகின்றது. ஆனால் அரவணைத்த தாய் அவளை வெறுக்கும் போது ஏற்படும் தீய கதை என்றாலே பரிதாபப்பட வேண்டி உள்ளது. மிகச் சத்தான உருக்கமான கதை.

எஸ். உமாபதி கோயம்புத்தூர்.

● திருச்சியில் நடைபெற்ற இந்திய மாதர் சங்க மாநாட்டைப் பற்றிய கட்டுரை அங்கு கலந்து கொண்டு மாதர்கள் பேசிய நல்ல பல கருத்துக்களை எங்களுக்கு அளித்தது. திருமதி சரோஜினி வரதப்பன் ''இந்தியப் பெண் அவளுடைய மத உணர்வோடு பண்பட்ட தன்மைக்காகவே உலகம் முழுவதிலும் மதிக்கப்படுகிறாள்'' என்று பேசியதைப் படித்தபோது நம் பெண்களின் மீதுள்ள மதிப்பு இன்னும் அதிகமாகியது.

கோ. பாபு சின்னசேலம்.

● அகில இந்திய மாதர் சங்கத்தின் தலைவி திருமதி. சரோஜினி வரதப்பன் அவர்களின் கருத்துக்கள் சிறப்பானவை. படித்த, பணியில் உள்ள பெண்கள் வசதியான இடத்தில் தான் நாம் திருமணம் செய்ய வேண்டும் என்ற நினைவின் காரணமாக அவர்கள் தங்களை இழக்கின்ற நிலைக்குத் தள்ளப் படுகிறார்கள் என்பதையும் மறுக்க இயலாது.

திருமதி. சுந்தரவல்லி செங்கை.

மங்கையர் மலர்

# செய்தி மலர்

'காஷ்மீர விடுதலை இயக்கம்' என்று சொல்லிக் கொண்டு, ஒரு பயங்கரவாதிகளின் குழு பிரிட்டனில் தோன்றியிருக்கிறது. இந்திய துணைத் தூதுவர் 'ரவீந்திர மாத்ரே'யை இவர்கள் கடத்திச் சென்று சுட்டுக் கொன்று விட்டனர். 'ஒரு மில்லியன் பவுண்டுகள் பணயத் தொகை தர வேண்டும்' என்றும் டில்லியில் பல ஆண்டுகளாகச் சிறை வைக்கப்பட்டிருந்த காஷ்மீர 'விடுதலை' இயக்கத் தலைவன் மகமது மக்பூல் பட் என்பவனை விடுவிக்க வேண்டும்' என்றும் இவர்கள் தாக்கீது அனுப்பியிருந்தனர். இதற்குப் பதில் சொல்வதற்குள்ளேயே பணயக் கைதியாகப் பிடித்து வைத்திருந்த மாத்ரேயை அநியாயமாகக் கொன்றுவிட்டனர்.



மக்பூல் பட்டுக்கு இந்திய கோர்ட்டு தீர்ப்புப்படி தூக்கு தண்டனை விதிக்கப்பட்டிருந்தது. சென்ற மாதம் தூக்கி விடப்பட்டு ஜெயிலிலேயே புதைக்கப்பட்டு விட்டான். இதைக் கண்டித்து ஸ்ரீநகரில் ஒருநாள் கடையடைப்பு நடந்தது. பயங்கரவாதமென்பது உலக நாடுகளில் பரவிவரும் தொற்றுநோய். விமானங்களைக் கடத்துவது, பணத்தையும், ஆயுதங்களையும் கொள்ளையடிப்பது, ஆட்களைக் கடத்துவது, கொல்வது என்று அரசுகளுக்கெதிரான கலகக்காரர்கள் இந்தியாவில் நாகாலாந்து, மிஜோரம், திரிபுரா, அஸ்ஸாம் ஆகிய வடகிழக்கு மாநிலங்களிலும் தற்போது பஞ்சாப் காஷ்மீர் ஆகிய இடங்களிலும் செயல்பட்டு வருகின்றனர்.

* * *

பஞ்சாபில் அகாலி அரசியல் உச்சகட்டத்தை எட்டியிருக்கிறது. சமீபத்திய 'பந்த்' ஒன்றின்போது, 13 பேர்கள் கொல்லப்பட்டனர்.

அரசுக்கெதிரான போராட்டங்கள் எல்லாம் 'கடையடைப்பு', 'பந்த்' என்று நடத்தப்படுகின்றன. சமீபத்திய 'பஞ்சாப்ஹரியானா கொலைகள்' பந்த்'தின் போதுதான் நடந்தது. பங்களூரில் நடிகர் ராஜ்குமார் கிளப்பிவிட்ட கன்னட மொழிக் கிளர்ச்சி பந்தின் போதும் பஸ் எரிப்பு, போலீஸ் சூடு உயிர் சேதம். சென்னையிலும் அடிக்கடி பந்த் நடத்தப்படுகிறது. எதிர்க்கட்சிகள் கடையடைப்பு, மறியல் என்று ஆரம்பித்தால் இங்கே ஆள்பவர்களும் பஸ்களை நிறுத்திப் பள்ளிக்கூடம் அரசு அலுவலகங்களை மூடி ஒத்துழைக்கின்றனர். எதிர்க்கட்சிகள் சார்புள்ள தொழிற்சங்கங்கள் 'பந்த்' நடத்தியபோது பஸ்கள் ஓடவில்லை. இதனால் ஏராளமான மக்கள் அவதிக்குள்ளாயினர்.

'பந்த்'தை நடத்துபவர்களுக்குப் பொது மக்கள் ஆதரவு இல்லாமல் இருந்தும் இதுபோன்ற கிளர்ச்சிகள் தொடர்ந்து நடைபெறுகின்றன. இதனால் ஏற்படக் கூடிய தேசிய உற்பத்தி, பொருள் நஷ்டங்களைப் பற்றி யாருக்குமே அக்கறையில்லை போலும்.

* * *

சோவியத் தலைமை கைமாறுவது உலகத்தைப் பாதிக்கும் விஷயம்.



1-5 மாதங்களுக்கு முன்புதான் பிரஷ்னேவுக்குப் பிறகு ஆண்ட்ரபோவ் தலைமைப் பதவி ஏற்ருர். அமெரிக்காவில் ரீகன் சோவியத் நட்புறவுக்கு எதிரான கொள்கையைக் கடைபிடிக்கிருர் என்று சொல்லி இரு வல்லரசுகளுக்கிடையே கெடுபிடி நிலைமை உருவாயிற்று. அணுஆயுதப் பேச்சு வார்த்தைகள் குறித்து இருதரப்பிலும் பயங்கர ஆயுதப் போட்டி ஆரம்பித்து விட்டது. இந்த நிலைமை மூன்ருவது உலகப் போரில் கொண்டு விடும் என்ற நிலையில் ஆண்ட்ரபோவ் இறந்து விட்டார். இவருக்குப் பிறகு கான்ஸ்டான்டின் செர்னென்கோ என்பவர் கம்யூனிஸ்டு கட்சிச் செயலாளராகத் தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கிருர். ரஷ்யாவில் கட்சிக் காரியதரிசிதான் ஆட்சியையும் நடத்துபவர்.

இவருக்கு 72 வயதாகி விட்டது. ஆண்ட்ரபோவைப் போல இவருக்கும் உடம்பில் ஏராளமான கோளாறுகள் இருப்பதாகவும் இவரும் நெடுநாள் நீடித்திருக்க மாட்டார் என்றும் கூறப்படுகின்றது.

பிரஷ்னேவின் நம்பிக்கைக்குப் பாத்திரமாக இருந்த இவர் இப்போது உலகப் போரைத் தவிர்க்க அமெரிக்காவுடன் நல்லுறவு ஏற்படுத்திக்கொள்வதில் மீண்டும் கவனம் செலுத்துவார் என்று எதிர்பார்க்கப்படுகிறது.

## ஒரு சினிமா செய்தி

ஹிந்திப்பட உலகில் அமிதாப் பச்சனுக்கு வசூல் மன்னன் என்று பெயர். ஆனல் சமீப காலமாக





அவரது படங்கள் தோல்வியைத் தழுவ ஆரம்பித்து விட்டன. ராஜேஷ் கன்னு இவருக்கு முன் முதலிடத்தில் இருந்தார். தொடர்ந்து தோல்விகளுக்குப் பின் முடங்கிக் கிடந்தவர், 'அவ்தார்' என்னும் குடும்பக் கதைப் படம் மூலம் முதலிடத்திற்குப்போட்டியிட வந்துவிட்டார். அடுத்தடுத்து அவருடைய இரண்டு படங்கள் வெற்றிக் கொடி நாட்டின. ராஜேஷ் கன்னுவின் செல்வாக்கை முறியடிக்க அமிதாப்பச்சன் 'இன்குலாப்' என்னும் அரசியல் கதை சொல்லும் படத்தில் நடித்து அதன் வெற்றி தம் முதலிடத்தைப் பாதுகாத்துத் தரும் என்று நம்பியிருந்தார். 'இன்குலாப்'புக்குப் போட்டியாக 'ஆஜ் கா எம். எல். ஏ. ராம் அவ்தார்' என்ற படத்தில் ராஜேஷ்கன்னு கதாநாயகனுக நடித்துக் குறுகிய காலத்தில் எடுத்து வைக்கச் செய்து விட்டார்.

சென்சார் போர்டு சர்டிபிகேட் தர மறுத்தும், 'இன்குலாப்' தான் முதலில் வெளி வந்தது. கடைசி சீனில் எல்லா எம். எல். ஏக்களேயும் சுட்டுத் தள்ளி விடுகிருர் அமிதாப். இதை அனுமதிக்க முடியாது என்று சென்ஸார் கமிட்டி சொல்லிவிட அமிதாப்பச்சன் டில்லி சென்று தம் அரசியல் செல்வாக்கைப் பயன்படுத்தி 'ஏ' சர்டிபிகேட் வாங்கி விட்டாராம்.

ஆஜ்கா எம். எல். ஏ. இனிமேல்தான் வெளி வரவேண்டும். ஆனல் இன்குலாப்பைவிட அதிகம் வெற்றிபெறும் என்று அதன் தயாரிப்பாளர் தாசரி நாராயணராவ் நம்பியிருக்கிருர்.

இந்த இரண்டு படங்களும் வெற்றியில் முதலிடத்தைப் பொறுத்து, அமிதாப் — ராஜேஷ் கன்னுவின் முதலிடம் முடிவு செய்யப்படுமாம்.

-ரங்கஸ்ரீ

கூந்தலுக்கு
எழிலோ எழில்
மென்மை
சுகமோ சுகம்...
வழங்குவது
ஹேலோ
ஷாம்பூ

ஹேலோ வழங்குது
கூந்தல் எழில்—
கூந்தல் பெற்றிடும்
மென்மை சுகம்.
அதன் மணமோ
அபூர்வப் புதுமையே,
ஹேலோ உணர்வே
உன்னதமே.




வியப்பூட்டும் புதிய ஹேலோ வரிசை

**ஹேலோ எக் ஷாம்பூ—**
புரத ஊட்டத்திற்கானது.

**புதிய ஹேலோ க்ரீன் ஆப்பிள் ஷாம்பூ—**
வியப்பூட்டும் புத்துணர்வு மணம் அளிக்கிறது.

**புதிய ஹேலோ ஹெர்பல் ஷாம்பூ—**
மூலிகைகளின் இயற்கை நலன்கள் உள்ளது.

**ஹேலோ உணர்வே உன்னதமே!**

GK&E.883.29.TM



பிப் '84 மங்கையர் மலருடன் இணைந்த இலவச இணைப்பைப் படித்திருப்பீர்கள். கருவுற்றது முதல் குழந்தை பிறப்பது வரை முழுமையான அறிவியல் பூர்வமான செய்திகளைத் தெரிந்து கொண்டு இருப்பீர்கள். அதை எழுதிய டாக்டர் அண்ணாஜி சில பயிற்சிகளைச் செய்வதன் மூலம் எலும்புகளைத் தளரச் செய்து வலியில்லாத பிரசவத்தை அடையச் செய்யலாம் என்கிறார். அதற்குப் பதினாறுவிதமான உடற்பயிற்சிகளை இங்கு கூறுகிறார்.

இவற்றை ஒவ்வொன்றாகக் கொஞ்சம் கொஞ்சமாகச் செய்து பழக வேண்டும். ஒரேயடியாக ஆரம்பித்து விடாமல் சிறிது சிறிதாக உடல் சோர்வடையாதபடிச் செய்ய வேண்டும்.

# வலியற்ற பிரசவத்திற்கு சில உடற்பயிற்சிகள்

டாக்டர். N அண்ணாஜி



1. தரையில் நேராகப் படுத்துக் கொண்டு, இரண்டு கால்களையும் மடக்கிக் கொள்ளவும். மூக்கின் வழியாக மூச்சை இழுத்தபடி, பக்கவாட்டில் உள்ள கைகளை மெதுவாக உயர்த்தித் தலைக்குப் பின் தலையோடு வைக்கவும். மூச்சை வாய் வழியாக விட்டபடி கைகளைப் பழைய நிலைக்குக் கொண்டு வரவும்.

2. பக்கவாட்டில் நீட்டிய கைகளுடன் முழங்கால் இட்டுக் கைகளை உயர்த்தவும். மூச்சை விடும் போது கைகளைப்பழைய நிலைக்குக் கொண்டு வரவும்.

3. நின்ற நிலையில் மூச்சை இழுக்கும் போது கைகளைத் தோள் மட்டத்திற்கு நீட்டியும், மூச்சு விடும்போது பழைய மட்டத்திற்குத் தாழ்த்தவும்.

4. படுத்தபடி கால்களை மடக்கி, முழங்கால்களை விரித்து, பின்னர் ஒன்றோடு ஒன்று இணையச் செய்யவும். அதேநேரத்தில் முழங்கால்களில் கைகளை வைத்துச் சேர்த்து, விரித்துச் செய்யவும்.









5. நின்றுகொண்டு, கை, கால்களைத் தரையில் அழுத்தி மூச்சை இழுக்கும்போது உடம்பை உயர்த்தவும். மூச்சு விடும்போது தாழ்த்தவும்.

6. காலை நீட்டி உட்கார்ந்தபடி மூச்சை இழுக்கவும். கால்களை விரிக்கவும். மூச்சை விடும்போது கால்களைச் சேர்க்கவும்.

7. ஒரு நாற்காலியின் பின் புறத்தைப் பிடித்துக் கொண்டு, கால்களை மாற்றி மாற்றி முன்னும், பின்னும் நீட்டவேண்டும். நீட்டும்போது மூச்சை இழுக்கவும். மடக்கும்போது மூச்சை வெளியே விடவும்.

8. பிட்டத்தின் தசைகளை இறுக்கி, பின்னர் முன்னிலைக்குக் கொண்டு வரவும்.

9. படுத்தபடி மூச்சை இழுத்து உடலை உயர்த்தவும். மூச்சை விடும் போது தாழ்த்தவும்.

10. படுத்தபடி கைகளை ஊன்றி, மூச்சு இழுக்கும்போது காலை நீட்டி உட்காரும் நிலைக்கு வரவும்.

11. முழங்காலிட்டு, மூச்சை இழுத்தபடி உடலை ஒரு பக்கமாக அசைக்கவும். மூச்சை விடும்போது பழைய நிலைக்கு வரவும்.

12. கால்களைச் சற்று அகல விரித்து நின்று மூச்சை இழுத்தபடி பின்புறம் வளையவும். மூச்சுவிடும்போது பழைய நிலைக்கு வரவும். இப்பயிற்சியை கடைசி மூன்று மாதத்திற்குத் தவிர்க்கவும்.













13. முன்னின்றது போலவே நின்று மூச்சை இழுக்கும்போது பக்கவாட்டில் வளையவும். மூச்சை விடும்போது பழைய நிலைக்கு வரவும்.

14. தரையில் காலை நீட்டியபடி உட்காரவும். மாற்றி, மாற்றி முழங்கால்களை மடக்கவும், நீட்டவும் செய்யவும்.

15. காலை நீட்டி உட்கார்ந்தபடி முன்னால் வளையவும். பின் முன்னிருந்த நிலைக்கு வரவும்.

16. நின்றபடி கால் விரல்களால் ஊன்றி உயரவும். பின் பழைய நிலைக்கு வரவும்.

இப்பயிற்சியைச் செய்யும்போது ஒழுங்காக மூச்சை இழுக்கவும். வெளி விடுதலும் அவசியம் ஆகையால் மூச்சை உள்ளிழுத்துப் பிடிக்கக் கற்றுக் கொண்டு, அதைப் பயிற்சி செய்ய வேண்டும். குறைந்தது 20 முதல் 30 நொடிகள் வரை மூச்சைப் பிடிக்கப் பயிற்சி செய்ய வேண்டும்.

எல்லாப் பயிற்சிகளையும் மெதுவாகவும், ஒழுங்காகவும் செய்ய வேண்டும். இவைகளை பத்து அல்லது பதினைந்து நிமிடங்களுக்கு மேல் செய்யக் கூடாது; காலைக் கடன்களை முடிக்கு முன்னே இவைகளைச் செய்தால் நலம். இப்பயிற்சிகள் உடலின் ஒவ்வொரு பாகத்திற்கும், குறிப்பாக கூபகத்தின் அடித்தளத்திற்கு வலுவைக் கொடுக்கின்றன.

இப்பயிற்சிகளை சூலி கருவுற்ற 16 வாரங்களுக்குப் பின்னர் தான் செய்யத் தொடங்க வேண்டும். பேறு நாள் வரையிலும் செய்ய வேண்டும். 16—வாரம்வரை உலாவுதல் (walking) தான் சிறந்த உடற்பயிற்சி.

**(அடுத்த இதழில் பிரசவத்திற்குப்பின்னுள்ள பயிற்சிகள்)**

# தாய்மைக்கும் தன்மானமுண்டு!

எஸ். கனகவல்லி சாரங்கபாணி

ஒரு வாரமாகப் புகைந்து கொண்டிருந்தது இன்றுகாலையில் இருந்து சண்டையாகி விட்டது. வழக்கம் போல ராமானுஜம் தன் மனைவியின் பக்கம்தான். ஒற்றைப் பிள்ளையாய் அவனைச் சீராட்டி வளர்த்து, இன்று பெரிய உத்யோகஸ்தனுய் அவனைப் பரிணமிக்க வைத்திருக்கும் அவன் தாய் அம்புஜம் தன் மாட்டுப் பெண்ணின் வார்த்தை அம்புகளால் குத்திக் குதறப்பட்டுக் கொண்டிருந்தாள். என்னக்காரணம் தான்! காலையில் எழுந்து வாசல் தெளித்துக் கோலம் போட்டு, பில்டரில் பொடி போட்டு, டிகாக்ஷன் இறக்கி வைத்திருப்பார் மாமியார் அம்புஜம். மருமகள் மைதிலி சாவதானமாக எழுந்து வந்து, பல் தேய்த்ததும், முதல் டிகாக்ஷனில் ஜலம் சேர்க்காது காய்ச்சிய பாலை விட்டுக் காப்பி கலந்து, தனக்கும் தன் கணவருக்கும் எடுத்துக் கொண்டு விடுவாள். பிறகு இரண்டாம் டிகாக்ஷனைத் தள்ளி விட்ட பால்



விட்டு, காப்பி கலக்கி மாமியாருக்குக் கொடுப்பாள். இதற்காகவே அவள் மாமியாரைக் காப்பி கலக்க விடுவதில்லை. அதே மாதிரி, பொரியல், வதக்கல் என்று அம்புஜம்மாள் சமைத்து வைத்தவைகளை, தாங்கள் இருவருமாகப் போட்டுச் சாப்பிட்டு, ரசவண்டியையும், தானில்லாத குழம்பையும், அரை ஸ்பூன் கறிவகைகளையும் வைப்பாள் மாமியாருக்கு.

இன்று, சற்று ஹீனமான குரலில், ''மைதிலி, எல்லா டிகாக்ஷனையும் ஒண்ணு பண்ணி மூணு பேருக்கும் சேர்த்துக் காப்பிக் கலந்துடேன். காப்பி தண்ணியா இருந்தா—நீங்க ரெண்டு பேரும் ஆஃபீஸ் கிளம்பிப் போய், அதுக்கு மேலே உள் ஒழிச்சு, ஜபதபம் பண்ணிட்டுச் சாப்பிட பதினொண்ணரை மணி ஆயிடும் — அதுவரைக்கும், தாங்க மாட்டேங்கறது'' என்றாள் அம்புஜம்.

விடுவிடென்று மைதிலி பிடித்துக் கொண்டாள் அம்புஜத்தை. ''பார்த்தீங்களா? நான் தண்ணி காப்பி கொடுக்கறேனும். மாமியார்னு, காப்பி கலந்து முன்னாடி கொடுக்கறதுக்கு எனக்குப் பட்டம் குடுக்கறு...! வேண்டாத மாட்டுப்பொண்ணு எது செஞ்சாலும் குத்தம்... என்னைப் பிடிக்காட்டி எங்கிட்ட ஏன் இருக்கணும்... எங்கேயாவது போகறது....!

பால் போளி செய்யும் போது பம்பாய் ரவையை கால் டீஸ்பூன் உப்புப்போட்டு மாவுடன் பிசைந்து இரண்டு மணி நேரம் ஊற வைத்து, நெய் தடவி பிசைந்து பூரி செய்தால் மிகவும் ருசியாக இருக்கும்.

மங்களா மகாதேவன்.

''நான் எங்கேடி போவேன்! பெத்தது இவன் ஒத்தைப்பிள்ளை... நாலு பிள்ளை இருக்கா...? இல்லே பொண் இருக்கா...? நாலு மூலைக்கு என்னைப் பந்தாட முடியுமா? இவன் ஒரே பிள்ளை... ராஜகுமாரனாட்டம் வளர்த்தேன்...''

''ஏன்... நாலு பிள்ளை பெத்துக்கறதை நானு வேண்டாம்னேன்... இல்லே... உங்க காலத்துல இப்போ மாதிரி குடும்பக்கட்டுப்பாடா... கண்ணறாவியா... ஒரு பிள்ளை பெத்தவ மலடுன்னு சும்மாவா சொல்லி இருக்கா.....

''நாலு பிள்ளை இருந்திருந்தா, உன் ஆம்படையானை, பி. டெக் படிக்க வைச்சு, நல்ல வேலைக்கு அனுப்பியிருக்க முடியுமா... கிராமப் பள்ளிக்கூட வாத்தியாரோட சம்பளத்துல நடக்கிற காரியமா? எங்கேயாவது பத்தாவது படிச்சுட்டு, அவன் கடையில கணக்கு எழுதிண்டு இருப்பான்...''

''பத்தாவது படிச்சிருந்தா நான் ஏன் கல்யாணம் பண்ணிண்டு குப்பை கொட்டறேன். பி. டெக் படிச்சிருக்கார்னுதான் ஒங்க அந்தஸ்தைப் பார்க்காம எங்கப்பா பெண்ணைக் குடுத்தார்...''

காலை வேளையில் இந்த யுத்த காண்டத்தைத் தவிர்க்க, ''சரி, சரி, நீ சும்மாயிருக்க மாட்டியா அம்மா... வயசாயிடுத்து... தொணதொணங்கறே...'' என்று அம்மாவைக் கடிந்தபடி, மனைவிக்குத் தெரியாமல் தன் காப்பியை அம்மாவிடம் கொடுத்தான். பிறகு அம்மாவின் தண்ணீர்க் காப்பியைத் தான் எடுத்துக் கொண்ட ராமானுஜம், ''ஐயோ பாவம், வாயில் வைக்க வழங்காத காப்பியை மைதிலி அம்மாவிற்குக் கொடுக்கிறாளே... எல்லா வேலையும் அம்மாவே செய்யும்போது....'' என்று மனசுக்குள் அங்கலாய்த்தான். மனைவிடம் தட்டிக் கேட்க மிகப் பயம். மைதிலி உர் உர் என்று தன் வேலையைக் கவனிக்க, அம்புஜம் சமைத்து இருவருக்கும் தட்டு வைத்தாள் சாப்பாட்டு மேஜையில்.

அம்புஜம் அம்மாளுக்கு இன்று நல்ல பொழுதாய் விடியவில்லை. வழக்கமாக உள் பாவாடையின் மேல் ஒரு பழைய புடவைக் கிழிசலைச் சுற்றிக் கொண்டு சாப்பிட்டுவிட்டு ஆஃபீஸ் போகுமுன் நல்ல புடவை கட்டிக் கொள்வாள் மைதிலி. அடை கோழி காப்பது போல, அன்று புல்லென்று ஆர்கண்டியைக் கட்டிக் கொண்டு சாப்பிட உட்கார்ந்திருந்தாள். பிள்ளைக்கு, குழம்பு விட்ட கையோடு, மருமகளின் தட்டிலும், குழம்பு விடும்போது அவள் வேண்டாம் என்று தடுத்தாள். மருமகளின் கை தன்மேல் பட்டுவிட்டால், மடி ஆசாரம் போய்விடுமே என்று அவசரமாகக் கையை நகர்த்திக் கொள்ள, குழம்பு மைதிலியின் புதிய ஆர்கண்டியின் வெளிர் நிறத்தில் மஞ்சளாய்ப் படிந்தது.

எடுத்தாள் மைதிலி காளி அவதாரம். ''நான் புதுப்புடவை கட்டிண்டு இருக்கறது உங்கம்மாவோட கொள்ளிக் கண்ணுல நெருப்பை வைச்சிருக்கு... வேணுமின்னு என் புடவையில குழம்பைக் கொட்டியிருக்கா... தனக்குப் புடவை வாங்கித்தரச் சொல்லிக் கேட்டும் வாங்கித் தரலைன்னு ஆங்காரம்...''

வாஸ்தவம்தான்... இரண்டு புடவைகளை மாற்றி மாற்றிக் கட்டுவதால் பல இடங்களில் கிழிந்து விட்டதால் புடவை வாங்கித் தரும்படி மூன்று மாதமாகக் கெஞ்சிக் கொண்டிருக்கிறாள் அம்புஜம். பாட்டி, மடிசார் கட்டு, கட்டிக் கொள்வதால், அந்தப் புடவைகளின் ஆயிரம் கிழிசல்களும் அதிகம் வெளியே தெரியவில்லை.

''இல்லை... மைதிலி... அம்மாவிற்குக் கண் தெரியலை... உன் தட்டுலதான் குழம்பு விட வந்தாள்...'' என்று ராமானுஜம் அசட்டுத்தனமாக அம்மாவிற்குப் பரிந்து வந்தான்...

''கண்ணு தெரியலை உங்கம்மாவுக்கு. சனி நாள் கோத்து, செவ்வாய், வெள்ளி தவ

றும. வீட்டுக்கு ஆகக் கூடாதுன்னு. புடவைக் கிழிசலைத் தைக்கிறு... நல்ல நிட்சண்யமான பார்வை இருக்கு... நேத்திக்குப் பக்கத்து வீட்டுப் பரிமளம் எதுக்கோ நம்ம வீட்டுக்கு வராளாம்... கதவைத் திறந்து போட்டுட்டு, கூடத்து சோபாவிலே மாமியார் நிம்மதியாத் தூங்கறுர்... யாரும் பகல் கொள்ளை அடிச்சின்டு போனுல் கேட்பாரில்லேங்கறு... இனிமே உங்கம்மா வாசல் ரேழியில் இருக்கட்டும்... நான் ஆபீசில் இருந்து வரவரைக்கும் ஒரு தூக்குல சாதமும், சொம்புல தண்ணியும் எடுத்து, ரேழியில வச்சுட்டு வீட்டைப் பூட்டின்டு போகப் போறேன் இன்னிலேந்து...''

நேற்று பக்கத்து வீட்டுப் பரிமளம், அம்புஜம்மாவிடம் வந்து மைதிலிக்குத் தெரியாமல், காப்பிப் பொடி, சர்க்கரை தரும்படி கெஞ்சினுள். மருமகளைக் கேட்காமல் தான் எதுவும் தர மாட்டேன் என்று அம்புஜம் மறுத்ததற்காகக் கறுவிக்கொண்டு இப்படிக் கோள் சொல்லி இருக்கிறுள் அவள்.

அம்புஜம் கண்கள் கசியப் பிரமித்து நின்றுள். கல்யாணம் ஆகி மருமகள் வந்து ஆறு மாதமாகிறது. வந்ததிலிருந்தே மாமியாரை எடுத்தெறிந்து நடந்துகொண்டாலும், தண்ணிக் காப்பி, சாப்பாட்டுக் குறைவு செய்தாலும் பொறுத்துக்கொண்டிருந்தாள். இன்று நாய் கட்டும் ரேழியில் நிற்க வைத்து விட்டாளே!

எவ்வளவு தவம் செய்து இந்த ராமானுஜத்தைப் பெற்றுள் அவள்... நாலு மாதமும், ஆறு மாதமுமாய் கருச்சிதைவுகள், பிறந்து இறந்த குழந்தை ஒன்று எல்லாவற்றிற்கும், பிறகு, திருப்புல்லாணி போய், நாகசாந்தி செய்து, சர்ப்ப ரட்சகி அம்மனுக்கு வேண்டிக் கொண்டு, உள்ளூர்க் கோயிலில் நெய்யால் மெழுகி, சர்க்கரைக் கோலமிட்டுப் பல விரதங்கள் இருந்து பெற்ற பிள்ளை. தங்கள் ஆசாரியன் பெயரை வைத்துச் சீரும் சிறப்புமாய் வளர்த்தாள். சொற்ப சம்பளக்கார ஆரம்பப் பள்ளி ஆசிரியரின் மகனுகவா அவன் வளர்ந்தான். ராஜபோகமாக. கேட்ட பண்டங்களை வாங்கிக் கொடுத்து, டவுன் கான்வென்டில் படிக்க வைத்தாள். விலையுயர்ந்த ஆடைகள், சின்னப் புலிநகச் சங்கிலி... மோதிரம் என்று அன்பைப் பொழிந்து வளர்த்தாள். சிறு வயதில் கணை வந்து, வைத்தியம் செய்த போது, அவனுக்காகத் தானும் வெந்நீரும், சோறும் மட்டும் சாப்பிட்டு விரதம் இருந்தாள். அம்மை போட்டு, மிக உக்கிரமாக இருந்த போது, கால் சலிக்கும் வரை, அம்மன் கோயிலில் உச்சி வெய்யிலில் தண்ணீர் இறைத்து, பிராகாரத்தை அலம்பியிருக்கிறுள்.

அவனுடைய அப்பா இறந்து குடும்பம் பரிதவித்த போதும், பிள்ளைக்கு, சௌக்கியங்களையோ, படிப்பையோ குறைக்கவில்லை அம்புஜம். அவளுடைய தாய் வீட்டுச் சீதனமான நகைகள், வெள்ளிப் பாத்திரங்கள், எல்லாவற்றையும் விற்று மகனை அவன் விரும்பியபடி பி. டெக். படிக்க வைத்தாள்.

நினைக்க நினைக்க அம்புஜம்மாளின் நெஞ்சம் பதறி, கண்ணீர் பெருக்கியது. இழைக்குப் பார்த்த அந்த வீட்டில் பகல் பத்து மணியிலிருந்து மூன்று மணி வரை, ரேழியில் அழிக்கம்பி வழியாக சூரியனின் வெய்யில் பாய்ந்து தகிக்கும். சிமென்ட் தரை சூடேறித் தகிக்கும். தன் கஷ்டத்தைநினைத்து, சோர்ந்து போன பாட்டி, வயிற்றுப் பசியால், சோற்றுத் தூக்கை எடுத்தபோது, அதில்எறும்பு மொய்த்து இருந்தது. பேசாமல் நாய்க்குச் சோற்றை வைத்துவிட்டு, சொம்புத் தண்ணீரையும் பருகி விட்டு சுருண்டு படுத்துக் கொண்டாள்.

ஆபீசிலிருந்து வந்ததும் மாமியாரை விரட்டி, பத்து பாத்திரம் தேய்க்கச் சொல்லி, சர்க்கஸ் ரிங் மாஸ்டரைப்போல் அதட்டி வேலை வாங்கலானுள் மைதிலி. எதிர்த்துப் பேசாமல் தலைவிதியை நொந்து கொண்டு அம்புஜம் இருந்ததால், கணவனும் தன் தாயாருக்குப் பரிந்து வராததால் மைதிலியின் அதிகாரம் நாளுக்கு நாள் தான் பறக்கலாயிற்று.

> உசிலிக்கு ஊற வைத்த பருப்பு, மிளகாயை நன்றாகப் பிழிந்து, டிரை மிக்ஸியில் அரைத்து விட்டு குக்கர் வைக்கும்போது சிறு தட்டில் இந்த அரைத்த கலவையை வைத்து வேக வைத்து விட்டால், கறிவதக்கும் போது எண்ணை அதிகம் பிடிக்காது. உசிலி செய்யும் நேரமும் மிச்சமாகும்.
>
> —கே. பத்மா.

ஒருநாள் பகல்... ரேழிக் கம்பியருகே நின்று தெருவை வெறித்தபடி, ராம நாமத்தை முணுகிக் கொண்டிருந்தாள் அம்புஜம்பாட்டி.

''அம்மா... வாத்தியாரு வூட்டு அம்மா... எங்கேம்மா நீங்க... புள்ளை சௌக்கியமா... ஏன் வீடு பூட்டிக் கிடக்கு...!'' என்று கேட்டான் குப்புசாமி. அம்புஜம் பாட்டியின் கணவர் வாத்தியாராக இருந்த கிராமவாசி குடியானவன் அவன்! தோளில் கிடந்த துண்டை, இடுப்பில்கட்டி, கைகூப்பினுன் பாட்டியைப் பார்த்து. ராமஜபம் செய்து கொண்டிருந்த பாட்டிக்கு ஆஞ்சநேயரே எதிர்ப்பட்டாற்போல இருந்தது. நெகிழ்ந்து போன குரலில் தன் அவல நிலைமையை அவனிடம் கூறி அழுதாள்.

''அம்மா... நம்ம கிராமத்துக்குடியானவ ஜனங்க அத்தனைக்கும் பாடம் சொல்லித் தந்த வாத்தியார் வீட்டு அம்மாவுக்கா இப்படி நிலைமை.... நீங்க ஊரோட வந்துடுங்க... நம்ம முத்துக்குமரன்தான் கோயில் விவகாரம் பார்க்கிறுரு... பெரிய பண்ணை...

நம்ம ஐயாகிட்ட ரொம்ப மரியாதை.... நீங்க ஒருத்தர் கையையும் எதிர்பார்க்க வேண்டாம்... நம்மூர், பெருமாள்கோயில் வாசல் தெளிக்கக் கோலம் போட்டு, பிராகாரம் பெருக்கி, விளக்கேத்தி வச்சு, கோயில்ல மடிசுத்தமாய்க் கொடுக்கிற தேசாந்திரிப் பட்டைச்சோறும், குடியானவ ஜனங்க மனசு நெறஞ்சு கொடுக்கிற மோரும் உங்களுக்குப் போறும்... கௌம்பி வந்துடுங்க... நம்ம கிராமத்துக்கு... இந்தப் பாழாப் போற பட்டண வாசமும், ஜெயில் மாதிரி அடைபட்டுக் கிடக்கிறதும் உங்களுக்கு வேண்டாம்'' என்றான் குப்புசாமி மனம் நெகிழ்ந்து.

குப்புசாமி, அரை டஜன் வாழைப்பழம் வாங்கிப் பாட்டியை வற்புறுத்திச் சாப்பிடச் சொன்னான். பாட்டி மாலையில் மகனும் மருமகளும் வரும் வரை யோசித்தாள்.

மருதோன்றி (மருதாணி) அரைக்கும் போது ஒரு ஸ்பூன் வெந்தயத்தையும் சேர்த்து அரைத்தால் உடம்பிற்கும் குளுமை. கைகால்களில் இட்டுக்கொண்டால் நன்றாக ஒட்டும். காய்ந்த பிறகு கூட உதிராமல் ஒட்டிக் கொண்டிருக்கும். நன்றாகப் பத்தும். —சாரதா.

குப்புசாமி கூப்பிடுவது சரிதான். பாட்டியின் கண்முன், வாத்தியாராக, கிராமத்தில் இருந்த பசுமையான நாட்களும், பெருமாள் கோயிலின் அழகும் காவிரியின் நீரோட்டமும் அக்ரஹாரத்து வீடுகளும் நினைவில் எழுந்தன. இங்கு மருமகளுக்கு வேண்டாதவளாய்த் அவள் ஏசுவதைத் தாங்கிக் கொள்ள வேண்டாம். மனத்தில் அம்மாவிடம் அன்பு இருந்தும், காட்டமுடியாத கோழை மகனைப் பார்த்து மனம் பொருமி, வேலைக்காரி போல இங்கே இருப்பதைவிட, பெருமாள் கைங்கர்யம் செய்து வாழ்க்கை நடத்துவது மேல். பாட்டி, மாலையில் மகனும், மைதிலியும் வந்ததும் கிராமத்துக்குப் போவதாய்ச் சொன்னபோது மகன் பதறினான். மைதிலியோ, அவனை அடக்கி விட்டு, ''தாராளமாய்ப் போங்கோ... நாங்க உங்களை விரட்டலே... நீங்களாய்த் தான் போகிறீர்கள்... 'நாங்க பணம் காசு அனுப்புவோம்னு எதிர்பார்க்காதீங்கோ...!' என்றாள் நிர்த்தாட்சண்யமாக...

அம்புஜம் பாட்டி, தஞ்சையில் அந்தச் சிறு கிராமத்திற்கு வந்து சேர்ந்து மூன்று வருடங்கள் முழுமையாக ஓடிவிட்டன. கோயில் திருக்குளத்திலிருந்து தண்ணீர் கொண்டு வந்து நந்தவனத்து மலர்ச் செடிகளுக்கு வார்ப்பாள். மருமகள் எப்போதும் தூஷித்த கூர்மையான கண்பார்வையால், மணம் பரப்பி, சொரிந்து கிடக்கும் பாரிஜாத மலர்களை, ஊசியால் நாரில் கோர்த்து, பல மாலைகள் கட்டி, மூலவர் உற்சவர், தாயார், ஆழ்வார், ஆஞ்சநேயர் ஆகியோருக்கு சாத்தும்படி அர்ச்சகரிடம் கொடுப்பாள். பாட்டியின் ஜீவனம், கோயில் பட்டை, தயிர் சாதத்தில் திருப்தியுடன் நடந்தது. புடவை நைந்து போன போது, தர்மகர்த்தா புடவை வாங்கிக் கொடுத்தார்.

மாமியார் போன பின்பு மைதிலி வீட்டு வேலைக்கு வேலைக்காரி வைத்துக்கொண்டு சௌகர்யமாகத்தான் இருந்தாள். அடுத்த வருஷமே அவளுக்கு ஒரு ஆண்குழந்தை பிறந்தது. குழந்தை பிறந்த சேதியைப்பாட்டிக்குத் தெரியப்படுத்தி. அந்தக் குழந்தைக்கு மாமனாரின் பெயரை வைக்கவேண்டும் என்ற எண்ணமே இல்லை அவர்களுக்கு. பிறந்த வீட்டில் இருந்து கொண்டு, தாயார் குழந்தையைப் பார்த்துக் கொள்ள, ஜாலியாக அலுவலகம் போய்க் கொண்டு இருந்தாள் மைதிலி. அவளுடைய அண்ணனுக்குக் கல்யாணம் ஆகியதால், அவன் மனைவி, நாத்தனார், குழந்தை, தன் வீட்டோடு இருப்பதை ரசிக்காமல், சிறுபூசல்களைத்துவக்கவே, மைதிலி பழையபடி தனி ஜாகை போனாள். குழந்தையைக் கவனிக்க ஆயா போட்டாள். ஆயாவின் திருட்டுத்தனம், கவனிப்பின்மையால் குழந்தை இளைக்க ஆரம்பித்தது. மைதிலியின் சிரமங்களைக்கவனித்த அவளுடைய தாய், ''மைதிலி, ஆயாவை நம்பிக் குழந்தையை விட்டால் குழந்தை குட்டிச்சுவர்தான். பேசாமல் உன் ஆத்துக்காரரை, கிராமத்துக்குப் போய், உன் மாமியாரை அழைத்து வரச்சொல்லு. குழந்தையையும் நன்றாகப் பார்த்துக்கொள்வாள். வீட்டுச் சமையல் வேலையையும் கவனிப்பாள்.''

மைதிலி ராமானுஜத்தை உடனே கிராமத்திற்குப் போய் மாமியாரை அழைத்து வரச் சொன்னாள்.

ராமானுஜம் கிராமத்திற்கு வந்து, சேதி சொன்னபோது, முதலில் அம்புஜம் பாட்டிக்குச் சந்தோஷம் தலைகால் புரியவில்லை. பேரன் பிறந்திருக்கிற சந்தோஷச் செய்தி.

''பாட்டி, நீங்க உங்க பிள்ளையோட போயிடுவீங்களா, கோயிலுக்கு யார் பெரிய கோலம் போடுவா...? மாலை கட்டி சார்த்துவா...? எங்களுக்கு ஸ்லோகம் சொல்லிக் கொடுப்பா...?'' கெஞ்சினர் அக்ரஹாரச் சிறுமிகள்.

இத்தனை நாளாய் தாயார் இருக்கிறாளா, இறந்து விட்டாளா என்று பார்க்காத பிள்ளை இன்று பறந்து வந்திருக்கிறான். தன் சுயநலத்திற்காக... குழந்தையை வைத்துக் கொள்ள – வேலைக்கு இருவரும் போய்விட்டால், வீட்டையும், குழந்தையையும் பார்த்துக் கொள்ளும் ஆயாவாகத் தான் அவளை நாடி வந்திருக்கிறான்... பெற்ற

தாயை சம்ரட்சிக்கும் நற்குணத்தோடு அல்ல... மூன்று வருடமாக, அவள் வயிற்றுப் பாட்டையும், வைகுண்டம் போய்ச் சேர புண்ய பலன்களையும் தரும், கோயில் கைங்கர்யத்தை, அன்பான கிராமவாசிகளைவிட்டு அவள் எதற்காகப் போக வேண்டும்...?' நிதானமாக யோசித்துப் பார்த்தாள் அம்புஜம் பாட்டி.

''ராமானுஜம், நான் உன்னோடு பட்டணத்துக்கு வரவில்லே. எனக்குப் பேரக் குழந்தையைப் பார்க்கணும்கற ஆசையில்லே. சொல்லப் போனால் தவம் பண்ணிப் பெத்த உன்னைக் கூடப் பார்க்கணும்கிற ஆவல் இல்லே. இனி போற வழிக்குப் புண்ணியமா... பெருமாள் கோயில் கைங்கர்யம் போதும் எனக்கு...!''

ராமானுஜம் எவ்வளவோ எடுத்துச் சொல்லியும், கெஞ்சியும் பாட்டி மசியவில்லே. கோபம், ஆங்காரம் தலைக்கேற ராமானுஜம் கத்தினான்.

''என்னம்மா, கூப்பிடக் கூப்பிட பிகு பண்ணிண்டு வரமாட்டேங்கற... நாளைக்குச் செத்தாயானால் நான்தான் கொள்ளி போடணும்... கிளம்பி வா... பேசாமல்...''

அம்புஜம் பாட்டி வைராக்கியமாகச் சிரித்தாள். 'உயிர் இருக்கும் போது வயிற்றுக்குச் சோறு போடவும், தவிச்ச வாய்க்கு தண்ணி குடுக்கவும், மானத்துக்கு துணி தரவும் செய்யாத நீ, செத்தபிறகு கொள்ளி போட்டு, ஸ்மசான காரியமெல்லாம் சிரத்தையாய்ச் செஞ்சு என்னைக் கரையேத்தப்போறியாக்கும்... இப்போ சொல்றேன் ராமானுஜம்... எனக்கு நீ ஒரு காரியமும் பண்ண வேண்டாம். நான் செத்துப் போனா என் உடம்பைத் தஞ்சாவூர் மருத்துவக்கல்லூரிக்கு, மாணவர்களுக்கு கற்பிக்க உபயோகப் படுத்திக்கச் சொல்லி எழுதிவைக்கப் போறேன். என் கண் ரெண்டையும், கண்ணில்லாத குருடர்களுக்கு, தானம் கொடுத்துடப் போறேன். எனக்கும் உனக்கும், பெத்த கடனோ, பந்தமோ இல்லே. நீ... போகலாம்...'' பாரதி கண்ட புதுமைப் பெண்ணின் தைரியம், விசால நோக்கு, வைராக்கியம் நிறைந்து நின்ற அம்புஜம் பாட்டி, அப்போது ராகு கால துர்க்கை போலக் காட்சியளித்தாள்.

---

## இம்மாத இல்லத்தரசி போட்டி

**பொருள்:** மைதாவால் செய்யும் பண்டங்கள்

**முடிவு தேதி:** 15.3.84

**சமையல் கூப்பன்**

................ என்ற தலைப்பில் சமையல் குறிப்பை இத்துடன் அனுப்பியுள்ளேன். இச் சமையல் குறிப்பு இதுவரை எந்தப் பத்திரிகையிலும், எந்தப் புத்தகத்திலும் வெளியானதல்ல என்று உறுதி கூறுகிறேன்.

கையொப்பம்

# RAMA®

## STAINLESS STEEL PRODUCTS

ALL PRODUCTS 10 YEARS GUARANTEE



HOT CASSEROLE

FREE →



Two S.S. Tumblers with each Water Filter











| WATER HEATER | WATER FILTER | HOT CARRIER | HEATER DRUM |
|---|---|---|---|

Quality Stainless Steel Products available at:

**K. RAMANATHAN & CO.**

131 Royapettah High Road, Luz, Madras 600 004.

Phone: 73377/71335

பரிசு பெற்ற குறிப்புக்களைத் தேர்ந்தெடுத்தவர்கள்

# இம்மாத இல்லத்தரசி

ஸ்ரீ லக்ஷ்மி மாதர் சங்கம்,
ஆழ்வார் திருநகர், சென்னை-87.

முதல் பரிசு: எவர்சில்வர் டிரம்

## டோக்ளா

**தேவையான பொருட்கள்:**

பச்சரிசி — 2 கப்.
கடலைப் பருப்பு — 1 கப்.
மோர் — 1 கப்.
சமையல் சோடா — அரை டீஸ்பூன்.



பச்சை மிளகாய் — 4 அல்லது 5
கொத்துமல்லி — சிறிதளவு.
கடுகு — அரை டீஸ்பூன்.
சீரகம் — அரை டீஸ்பூன்.
கடலெண்ணெய் — கால் கப்.
உப்பு — வேண்டிய அளவு.

**செய்முறை:**

அரிசியையும், கடலைப் பருப்பையும் ரவை போல் உடைத்துக் கொள்ளவும். பிறகு அதில் ஒரு கப் மோர் விட்டு கலக்க வேண்டும். பிறகு வேண்டிய அளவு வெந்நீர்விட்டு தோசை மாவு போல் கரைத்து வேண்டிய அளவு உப்பைப் போட்டு முதல் நாள் இரவு கரைத்து வைக்க வேண்டும்.

மறுநாள் காலையில் பச்சை மிளகாய், கொத்துமல்லி இவ்விரண்டையும் சிறிது சிறிதாக நறுக்கி, வாணலியில் எண்ணெய் விட்டு கடுகு, சீரகம் இவற்றைத்தாளித்து அதில் நறுக்கிய பச்சை மிளகாய், கொத்துமல்லி இவற்றைப் போட்டு வதக்கி முதல் நாள் இரவு கரைத்து வைத்த மாவில் கொட்டி இளக்க வேண்டும்.

பின்பு அரை டீஸ்பூன் சமையல் சோடாவையும் மாவில் போட்டு இளக்க வேண்டும். அப்பொழுது மாவு நுரை நுரையாக பொங்கி வரும். பின்பு ஒரு வாயகன்ற பாத்திரத்தில் எண்ணெய் தடவி அதில் இரண்டு அல்லது மூன்று கரண்டி மாவை விட்டு குக்கரினுள் வைத்து மூடிவிடவேண்டும். பத்து நிமிடம் வெந்த பின் பாத்திரத்தைக் குக்கரிலிருந்து எடுக்க வேண்டும். ஆறிய பின் பாத்திரத்தை ஒரு தட்டின் மேல் கவிழ்த்துத் தட்டினால் பாத்திரத்தில் ஒட்டாமல் வரும். மிகவும் மிருதுவாக இருக்கும். மீதி மாவையும் இவ்வாறே வேக வைக்க வேண்டும்.

பின்பு அவற்றைத் துண்டம் துண்டமாக வெட்டித் தக்காளி சூப்புடன் கலந்து பரிமாறலாம். விருப்பமுள்ளவர்கள் மோர் அல்லது தயிருடன் கலந்து சாப்பிடலாம்.

**ஸ்ரீமதி கிருஷ்ணன், நாக்பூர்-22.**

இரண்டாம் பரிசு: எவர்சில்வர் தவலை

## ரவை பாத்

**தேவையான பொருள்கள்**

பம்பாய் ரவை — 1 ஆழாக்கு.
பெரிய வெங்காயம் — 2.
பீன்ஸ் — 50 கிராம்.
கேரட் — 50 கிராம்.
உருளைக்கிழங்கு — 2.
பச்சை மிளகாய் — 10.
இஞ்சி — ஒரு சிறு துண்டு.
தேங்காய் — 1 மூடி.
மசாலாப்பொடி — 1 ஸ்பூன்.
டால்டாவும் எண்ணெயும் சேர்ந்து ஒரு கரண்டி.
தாளிக்க — கடுகு, உளுத்தம்பருப்பு, கடலைப் பருப்பு, முந்திரிப் பருப்பு.
வாசனைக்கு — கொத்தமல்லி, கறிவேப்பிலை,
தேவையான உப்புத்தூள்.
நெய் — ஒரு டேபிள் ஸ்பூன்.

**செய்முறை:**

பச்சை வாசனை போகும் வரையில் ரவையை வாணலியில் எண்ணெய் விடாது வறுத்து எடுத்து வைத்துக் கொள்ளவும். தேங்காய்த் துருவலுடன், இஞ்சி, பச்சை மிளகாய் சேர்த்து விழுதாக அரைத்து வைத்துக் கொள்ளவும்.

வாணலியை அடுப்பில் ஏற்றி டால்டா எண்ணெயை ஊற்றி, காய்ந்தவுடன் அரை ஸ்பூன் கடுகு போட்டு, அது வெடித்தவுடன், பருப்பு வகைகளைப் போட்டுப் பொன் நிறத்தில் வறுக்கவும்.

பிறகு சிறு துண்டுகளாக நறுக்கிய வெங்காயம், உருளைக்கிழங்கு, கேரட், பீன்ஸ், கறிவேப்பிலை இவற்றைச் சேர்த்து, உப்புத் தூளும் போட்டுச் சுருள வதக்க வேண்டும். காய் வெந்தவுடன் வறுத்த ரவையையும் தேங்காய் விழுதையும் கொட்டி மேலும் சில நிமிடங்கள் வதக்கவும். மற்றொரு அடுப்பில் இரண்டு தம்ளர் தண்ணீரைக் கொதிக்க வைத்து, சூடாக அதையும் ஊற்றிக் கைவிடாமல் கிளறவும். ரவை வெந்தவுடன் இறக்குமுன் மசாலாப்பொடியைத் தூவிக் கொத்தமல்லி சேர்த்து நெய்யையும் ஊற்றி இறக்கவும்.

வெங்காயத் தயிர்ப் பச்சடியுடன் இதைச் சாப்பிட ருசியாக இருக்கும்.

**விமலா, தூத்துக்குடி-8.**

மூன்றாம் பரிசு: எவர்சில்வர் தூக்கு

## ஸாபுதாணா கிச்சடி:

**தேவையான பொருட்கள்:**

ஜவ்வரிசி — 2 கப்.
வறுத்த தோலுரித்த வேர்க்கடலை முக்கால் கப்.
உப்புப் பொடி — 1 தேக்கரண்டி.
மஞ்சள்பொடி — 1 சிட்டிகை.
கடுகு — 1 தேக்கரண்டி.
சீரகம் — 2 தேக்கரண்டி.

பச்சை மிளகாய் — 4.
பச்சைக் கொத்துமல்லி — ஒரு பிடி.
ஆறு கரண்டி (முட்டையளவு) எண்ணெய்

**செய்முறை:**

ஜவ்வரிசியை இரண்டு மணி நேரம் ஊற வைத்து, பிறகு வடிகட்டியில் கொட்டி, நீரை வடிய வைத்து எடுத்துக் கொள்ளவும். சுத்தம் செய்த வேர்க்கடலையை மிக்ஸியில் போட்டு பொடித்துக் கொள்ளவும். வாணலியில் எண்ணெய் விட்டு காய்ந்ததும் கடுகு, சீரகம், பச்சை மிளகாய் தாளித்து, கொத்துமல்லியையும், பொடிப் பொடியாக நறுக்கிப் போட்டு, உப்பு, மஞ்சள் பொடி, பிசிறிய ஜவ்வரிசியைக் கொட்டி ஒரு முறை கிளறி விட்டு, வேர்க்கடலைப் பொடியையும் போட்டு நான்கு அல்லது ஐந்து முறை கிளறி விடவும். ஊறிய ஜவ்வரிசி நன்கு வெந்து முத்து முத்தாக பொடி கலந்து உதிரி சாதம் போல் இருக்கும்.

**-எஸ். மீனாட்சி, சென்னை-90.**

**ஆறுதல் பரிசு: எவர்சில்வர் பால்சொம்பு**

## பூரண அடை

**தேவையான பொருட்கள்:**

ராகிமாவு — 500 கிராம் (சலித்தது)
மரவள்ளிக்கிழங்கு — 250 கிராம்
தேங்காய்த் துருவல் — அரை மூடி.
வெங்காயமும் பச்சைமிளகாயும் —2 தலா
இஞ்சி — 1 சிறு துண்டு.
கொத்துமல்லித் தழை — 1 பிடி.
மற்றும் ருசிக்கு உப்பு — சுடுவதற்கு எண்ணெய்.

**செய்முறை:**

முதலில் ராகிமாவை வெறும் வாணலியில் லேசாக வறுத்துக் கொள்க. தேங்காய்த்துருவலை அதில் கலந்து உப்பு கரைத்த கொதி நீரை விட்டுக் கிளறி (கொழுக்கட்டைக்குக் கிளறுவது போல) சிறிது எண்ணெய்விட்டு மூடி வைக்கவும்.

மரவள்ளியை தோல் சீவி துண்டுகளாக்கி வேக வைத்துத் துருவிக் கொள்க. வாணலியில் சிறிது எண்ணெய் விட்டு வெங்காயம், பச்சை மிளகாய், இஞ்சி இவைகளை வதக்கிக் கொண்டு, மரவள்ளித் துருவலையும் உப்புத் தூளையும் சேர்த்துக் கிளறி இறக்கி சிறு எலுமிச்சை அளவில் உருட்டிக் கொள்க.

கிளறி வைத்த ராகி மாவில் கொத்தமல்லித் தழை சேர்த்து ஐந்து நிமிடம் நன்றாகப் பிசைந்து பெரிய எலுமிச்சை அளவில் உருண்டைகள் உருட்டிக் கிண்ணங்களாகச் செய்து (மோதகம் செய்வதுபோல) மரவள்ளி பூரணத்தை வைத்து மூடி —எண்ணெய் தடவிய வாழை இலையில் ஒவ்வொரு உருண்டையையும் அடையாகத் தட்டித் தோசைக் கல்லில் போளி சுடுவது போலச் சுட்டு எடுக்கவும்.

கடசுட, சட்டினியுடன் பரிமாறலாம்.

**-வி. பத்மாவதி, கோயம்புத்தூர்-1.**

**ஆறுதல் பரிசு: எவர்சில்வர் ஜக்**

## வெஜிடபிள் பருப்பு இட்லி

**தேவையான பொருட்கள்:**

கடலைப்பருப்பு — 250 கிராம்.
பயத்தம் பருப்பு — 250 கிராம்.
அரிசி — 100 கிராம்.
(மெஷினில் அரைத்த) மாவு — உலர்ந்தது (அ) மிக சன்ன ரவை.
காய்கறிகள்:
பீன்ஸ் — 50 கிராம்.
கேரட் — 50 கிராம்.
கோஸ் — 50 கிராம்.
காலிபிளவர் — சின்னது பாதி.
ப. மிளகாய் — 5.
திட்டமான உப்பு, கொஞ்சம் மோர், ஒரு சிட்டிகை சமையல் சோடா, தாளிக்க எண்ணெய்கடுகுஉளுத்தம்பருப்பு,க.பருப்பு மணிலா, தேங்காய் துருவல் கொஞ்சம்.

**செய்முறை:**

முதலில் கடலைப் பருப்பு பயத்தம்பருப்பு அரிசி கலந்த மாவை முதல் நாள் இரவே கொஞ்சம் மோரில் உப்புப் போட்டு ஒரு சிட்டிகை சமையல் சோடாவுடன் இட்லி மாவு பதத்தில் தண்ணீர் கலந்து கரைத்து வைக்கவும். காலையில் காய்கறிகளைச் சின்னதாகத் துண்டுகள் செய்து கொஞ்சம் எண்ணெய் விட்டுத் தாளித்து வாணலியில் வதக்கிப் பின் மாவில் கலக்கவும். பின்னர் குக்கர் அடுக்கிலோ அல்லது தட்டுகளிலோ எவ்வளவு கனமாக வேண்டுமோ அதில்பாதி அளவுக்குக் கரைத்த மாவைப்போட்டு 15—20 நிமிடம் வேக வைக்கவும். எடுத்துப் பார்த்தால் நன்றாக வெந்து உப்பிக்கொண்டு இருக்கும். பிறகு கத்தியால் துண்டுகள் போட்டு, மேலே கடுகு தாளித்து தேங்காய் துருவலையும் கொத்துமல்லிக் கீரையையும் தூவி அழகு சேர்க்கவும்.

சாதாரண தோசை மிளகாய்ப் பொடியுடனோ அல்லது தக்காளிச் சட்டினியுடனோ சாப்பிட மிகவும் சுவையாக இருக்கும். உப்பு, காரம், புளிப்பு இருப்பதால் குழந்தைகள் தொட்டுக் கொள்ள இல்லாமலேயே சாப்பிடுவார்கள்.

**- துர்காலட்சுமி, பெங்களூர் -32.**

பிரசுரத்திற்குத் தேர்ந்தெடுக்கப்பட்ட கட்டுரைகள்

# வாழ்க்கையில் நான் கற்ற பாடம்



**கண்ணால் கண்டதும் பொய். காதால் கேட்டதும் பொய். தீர விசாரிப்பதே மெய்!**

● பதினைந்து வருடங்களுக்கு முன்பு நான் இருந்த வீட்டிற்குப் பக்கத்தில் தாய், தந்தை, மகன், மருமகள் மூன்று குழந்தைகள் இருந்தனர். இரண்டு பெண், ஒரு பையன். மருமகள் இங்கும், மகன் துபாயிலும் இருந்தார்கள். லீவில் இங்கு வந்து தங்கிவிட்டுச் செல்வார். ஒருமுறை அவ்வாறு அவர் வந்திருந்த பொழுது, அவரது நண்பர்கள் துபாயில் வேலை பார்ப்பவர்கள் இங்குள்ளவரிடம் சில பொருட்களைக் கொடுக்கச் சொல்லியிருந்தனர். பிரத்தியார் பொருளை முதலில் அவரவர் வீட்டில் சேர்த்து விட வேண்டும் என்று எண்ணி அவர் வீட்டில் உள்ளவர்களிடம் 'முக்கிய வேலை ஒன்று உள்ளது அதை முடித்துவிட்டு வருகிறேன்' என்று கூறி ஊரில் இருந்து வந்த அன்றே கிளம்பி விட்டார்.

அவர் சென்ற பிறகு அவர் ஊரில் இருந்து கொண்டு வந்த சூட்கேசை எடுத்து, அவருடைய துவைக்க வேண்டிய துணிகள் எவை எவை என்று பார்க்கும் பொழுது அவரது சட்டைக்கு நடுவில் இருந்து ஒரு போட்டோ விழுந்தது. அப்படத்தில் இருந்தவரோ அழகான பதினெட்டு அல்லது இருபது வயதுடைய பெண்மணி. இதைப் பார்த்ததுமே ஒருவேளை தனது கணவன் இவளைப் பார்க்கத்தான் முக்கிய வேலை உள்ளது என்று சென்றுள்ளாரோ என்று மனைவி சந்தேகிக்க ஆரம்பித்து விட்டாள்.

இந்த அவலத்தைப் பார்த்துக் கொண்டிருப்பதை விட, நான் இறந்து விடுவதே சிறந்தது என்று கருதி பாலில் விஷ மாத்திரைகளைக் கலக்கிக் கொண்டிருந்தாள். அந்நேரம் பார்த்து அவளது உறவினர் ஊரில் இருந்து வரவே அவர்களை அழைக்க வெளியே வந்த பொழுது ஜன்னல் வழியே வந்த பூனை அப்பாலைக் குடித்து அங்கேயே மயக்கமுற்றது. பிறகு பாலில் விஷம் கலந்த உண்மை அனைவருக்கும் தெரிந்து விட்டது.

அதுமுதல் கணவன் – மனைவி பேச்சு வார்த்தையும் நின்றது. மாமியார், மாமனாரின் உதவியையும் இழந்த அவள் உண்பதற்குக் கூட வழியின்றித் தவித்தாள். சில வருடங்கள் கழித்துப் பல நோய்களினால் துன்புற்று உயிர் துறந்தாள். உயிர் துறப்பதற்கு முன், அவளுக்குப் பல உதவிகளைச் செய்த என்னிடம் மட்டும் உண்மையைக் கூறினாள்.

''அவரது பெட்டியில் ஒரு பெண்ணின் படத்தைப் பார்த்தேன். அவருக்கும் அவளுக்கும் என்ன உறவு என்று தெரியவில்லை'' என்று அழுதாள்.

அவள் இறந்த பிறகு, அவளது கணவனிடம் அப்படத்தைப் பற்றிக் கேட்டேன். அதற்கு அவர் கூறிய பதில் என்னைத் திகைக்க வைத்தது. அப்போட்டோ தன்னுடன் வேலை பார்க்கும் ஒரு பெண்மணியினுடையது. அப்பெண்மணி இந்தியாவிற்கு இரண்டு வருடங்களுக்கு ஒரு முறைதான் வருவாராம். அதனால் அவ்வப்பொழுது அங்கு போட்டோ எடுத்து தனது உறவுக்காரர்களிடம் கொடுக்கச் சொல்லுவாராம். அவ்வாறு அவர் போனதடவை நிறைய கொடுத்திருந்தார்.

''அதில் ஒன்று மட்டும் எவ்வாறு தங்கிவிட்டது என்று எனக்கே தெரியவில்லை. அதனால் தான் பெட்டிக்குள் வைத்திருந்தேன். அங்கு சென்ற பிறகு அவரிடமே கொடுத்துவிடலாம் என்றிருந்தேன்'' என்றார்.

அவரிடம் அவருடைய மனைவி சந்தேகப்பட்டதைக் கூறியதும் மிகவும் கலங்கினார். அன்றே அவரிடம் விசாரித்திருந்தால் அப்

போட்டோவைப் பற்றித் தெரிந்துகொண்டு சந்தோஷமாக அவள் வாழ்ந்திருக்கலாம். விதி யாரை விட்டது? எதையுமே மனதிற்குள் வைத்து மறுகிக் கொண்டு, எங்கோ பார்த்ததையோ, கேட்டதையோ வைத்துக் கொண்டு, ஒருவரைப் பற்றி முடிவெடுப்பது என்பது எவ்வளவு தவறு என்பதை அன்று புரிந்து கொண்டேன்.

-ஜெ. சரோஜா, நெய்வேலி-3.




## ஏழ்மை சொல்லித் தந்த பாடம்

ஒவ்வொருவருடைய வாழ்க்கையிலும் எவ்வளவோ இருக்கும். ஆனால் என் வாழ்க்கையில் நான் நன்றாக விவரமறிந்து அனுபவப்பட்ட பாடம் ஏழ்மை! இது மனிதனை எவ்வளவு கொடிய வழிகளில் சிக்கவைக்கின்றது?

நான் பிளஸ்டூ படித்து விட்டு மேற்கொண்டு கல்லூரியில் படிக்க வசதியில்லாததால் ஆசிரியை தொழிற்பயிற்சிக்கு விண்ணப்பம் செய்து நேர்முகத் தேர்வுக்குச் சென்றேன். ஒரு முறையல்ல இருமுறை. ஆனால் கிடைத்தது ஏமாற்றம். ஆயிரக்கணக்கில் அவர்கள் கேட்ட பணம் கொடுத்தால்தான் இடமுண்டு என்று கூறி விட்டனர். எனக்கு மட்டுமா! எனது மூத்த சகோதரிக்கும் இப்படியே! இதற்கு அடுத்த சகோதரிக்கு நர்ஸிங் பயிற்சியிலும், ஆசிரியைப் பயிற்சியிலும் மூன்று முறை நேர்முகத் தேர்வுக்குச் சென்று வந்தோம். ஆனால் கிடைத்தது ஏமாற்றம். எங்கு சென்றாலும் பணம் இல்லாவிட்டால் ஒன்றுமில்லை. வாழ்க்கையில் ஒரு அடி எடுத்து வைத்து 'முன்னேற வேண்டுமானால் அதற்குக் கொஞ்சமாவது பணம் வேண்டும். எங்களைப் போன்ற நாதியற்ற ஏழைகளுக்கு முன்னேற யாருமே கைகொடுக்க மாட்டார்கள் என்பதே ஒவ்வொரு முறை தோல்வியுற்ற போதும் நான் கற்றபாடம். வாழ்க்கையில் ஏமாற்றங்களையே சந்தித்த நான் தொடர்ந்து வரும் காலங்களிலாவது வெற்றி பெறுவேன்! இனியாவது சமுதாயத்தில் நல்லவர்க்கும், திறமை மிகுந்தவர்க்கும் மதிப்பளிக்கட்டும் என்று ஆண்டவனைப் பிரார்த்திக்கிறேன்.

-எஸ். கே. தேவி, தூத்துக்குடி-8.

## சந்தேகம் என்னும் பேய்!

அப்போது எனக்கு வயது பதினேழு. பள்ளியில் படித்துக் கொண்டிருந்தேன். உல்லாசமாக, பட்டாம்பூச்சியாக திரிந்த என்மேல் மன்மதன் அவனுடைய காதல் பாணத்தைத் தொடுத்து விட்டான். எனக்கும் பக்கத்து வீட்டில் இருந்த ஓர் ஓவியக் கலைஞர் ஆன குமார் என்பவருக்கும் காதல் துளிர்த்தது. என் காதலைப் பார்த்து கவலைப் பட்ட என் பெற்றோர், என்னை வேறு ஒருவருக்குத் திருமணம் முடிக்க எண்ணினர். என் தந்தை எனக்கு எவ்வளவோ எடுத்துச் சொன்னார். ''பாப்பா, உனக்கு செவ்வாய் தோஷம் உள்ளது. ஆகையால் அந்த மாப்பிள்ளை வேண்டாம். பின்னால் நீதான் கஷ்டபடுவாய். யோசித்துச் செய்'' என்றார். ஆனால் நான் எதையும் கேட்கத் தயாராய் இல்லை. காதலித்தவரையே திருமணம் செய்து கொள்வோம் என முடிவு செய்து, ஒருநாள் வீட்டை விட்டு அவருடன் வெளியேறினேன். பதிவுத் திருமணம் செய்து கொண்டேன்.

திருமணத்திற்குப் பின்புதான் எந்த ஓர் ஆணையோ, அல்லது பெண்ணையோபற்றி முழுவதுமாக இல்லாவிட்டாலும் ஓரளவுக்காவது புரிந்து கொள்ள முடியும். என் கணவரது குணங்களையும் நன்றாகப் புரிந்து கொண்டேன். ஆனால் புரிந்து கொண்ட அளவிற்குத் தெரிந்து நடக்கவில்லை. இது என் தவறு. நான் எப்போதும் அவரிடம் எதையாவதுக் கிளறிக் கிளறிக் கேட்டுக் கொண்டே இருப்பேன். அதுவும் அவர் மனம் புண்படும்படியாக. யாராவது பெண்ணிடம் பேசிவிட்டாலோ அவ்வளவுதான். இன்னும் கத்துவேன். அவரும் வயதோ, பக்குவமோ முதிராத இளைஞர். எனவே அப்போதெல்லாம் அவர் ஒரு கயிற்றை எடுத்துக் கொண்டு, 'நான் தூக்கிலிட்டுச் சாகப் போகிறேன்' என்பார். எனக்கோ அன்றெல்லாம் கவலையாகி மிகவும் பயந்து போய் 'இனி இப்படியெல்லாம் பேசமாட்டேன்' எனக் கெஞ்சுவேன். இது என் கணவ



# இலவசம்!







**கவர்ச்சியான சீப்பு**
இந்த சிறப்புப் பேக்
வாங்கும்போது

## நைஸில்

**வாங்குங்கள்**
**வியர்க்குருவை**
**விரட்டுங்கள்**

மிதமான
இருப்பு
தேர்ந்தெடுத்த
விற்பனையிடங்
களில் மட்டும்

உடல்நலத்தின்
உறைவிடம்
க்ளாக்ஸோ




ருக்கு வாடிக்கையாய்ப் போய் விட்டது. ஏதாவது சிறு தகராறு எங்களுக்குள் ஏற்பட்டாலும் உடன் ஒரு கயிற்றை எடுத்துக் கொண்டு, 'நான் சாகப் போகிறேன் பார்' என்பார்.

ஒருநாள் எங்களுக்குள் சிறு தகராறு ஏற்பட்டபோது, அவர் கத்த, நான் எதிர்த்துப் பேச, உடனே, அவர் பக்கத்தில் இருந்த மண்ணெண்ணெய் டின்னை எடுத்துத் தன் மீது ஊற்றிக் கொண்டு பற்றவைத்தும் விட்டார். நான் கதறிக் கொண்டே அவருடன் கட்டிப் புரண்டேன்: அலறித் துடித்தேன். யார் யாரோ வந்தார்கள். அவரிடமிருந்து என்னைப் பிடித்து இழுத்தார்கள். எனக்குச் சரியாக மண்டையில் அடி. மூன்று நாள் கழித்து எனக்கு நினைவு திரும்பியது. மெல்ல கண் விழித்த போது என் அருகே நர்சுகள், டாக்டர், அம்மா, அப்பா உறவினர்கள், ஆனால் என் கணவர்...

என் கணவர்... தீப்புண்ணில் உடல் வெந்து நான் தவிக்க அவர் போய்விட்டார். அப்போது என் வயிற்றில் அவர் குழந்தை நான்கு மாதம். நாங்கள் வாழ்ந்ததோ ஆறு மாதம். இவ்வளவு அதிர்ச்சியிலும் குழந்தைக்கு ஒன்றும் ஆகவில்லை. அதையே என் பற்றுக் கோலாக நினைத்து வாழ முடிவு செய்தேன்.

பத்தாவது மாதம் ஆண்மகன் பிறந்தான். என்னை விட்டுவிட்டு அவர் சுலபமாகப் போய்விட்டார். ஆனால் மனிதர்கள் என்னைப் பற்றி, ''அவள் என்ன தப்பு செய்தாளோ, ஓடிப் போனவள்தானே. இன்னொருவருடன் ஏன் ஓட மாட்டாள். அதனால் தான் அவன் போய் விட்டான்'' என்று தவறாகப் பேச ஆரம்பித்தார்கள். அவற்றையெல்லாம் சகித்துக் கொண்டு காலத்தை ஓட்டி வருகிறேன், என் மகனுக்காக. சிறுசிறு வேலைகளில் கிடைக்கும் வருமானமே ஆதாரம். அங்கும் மனிதர்களின் கழுகுக் கண்கள். என் வாயால் நானே கெட்டு இன்று திருந்தி (என்ன பிரயோஜனம்?) என்மகனே வாழ்வாக வாழ்ந்து வருகிறேன்.

-தே. கிருஷ்ணவேணி, குளித்தலை.

## சிறிய குடும்பமே தெவிட்டாத இன்பம்

● நான் திருமணமாகி ஐந்து குழந்தைகளுக்குத் தாய். முதல் மூன்றும் பெண்ணாகப் போனதில் ஆண் குழந்தை வேண்டுமென்று குடும்பக் கட்டுப்பாடு ஆபரேஷன் செய்து கொள்ளவில்லை.

மூன்றாவது பிரசவத்தின் போதே குடும்பக் கட்டுப்பாடு ஆபரேஷன் செய்து கொள்ளலாம் என்றிருந்தேன். ஆனால் அந்தக்குழந்தையும் பெண்ணாகப் போனதில், என் கணவரோ, என் பிறந்த வீட்டினரோ, புகுந்த வீட்டினரோ யாரும் அதை ஆமோதிக்கவில்லை. வேறு வழியின்றி அடுத்த குழந்தையைப் பெற்றுக் கொள்ளத் தயாரானேன். நல்லவேளையாக அது ஆணாகப் பிறந்தது. நானும் இந்த முறை ஆபரேஷன் செய்து கொள்ள வேண்டும் என்று சொன்னேன்.

அப்போதும் என் கணவரோ, என் வீட்டினரோ சம்மதிக்கவில்லை. ஏனென்றால் நான் மாடிப்போர்ஷனில் குடியிருந்ததால், ஆபரேஷன் செய்தால் மாடி ஏறி இறங்கக் கூடாது என்று, என்னென்னவோ சொல்லி, பயமுறுத்தி அந்த முறையும் ஆபரேஷன் செய்து கொள்வதை நிறுத்தி விட்டார்கள். என் மனதில் இனி குழந்தையே பெற்றுக் கொள்ளக் கூடாது என்று தீர்மானம் செய்து கொண்டேன். ஆனால் அந்த உறுதி என்னோடு மட்டும் இருந்தால் போதுமா? என் கணவருக்கு....

அதன்பின் நான் மூன்று முறை அபார்ஷன் செய்து கொண்டும், நான்காவது முறை டாக்டர் திட்டியதால் முழுதாகக் குழந்தை பெற்றுக் கொண்டு ஆபரேஷன் செய்து கொண்டு விடவேண்டும் என்று தீர்மானித்தேன். குடும்ப மொத்தம் எதிர்த்தும் நான்காம் நாள் ஆபரேஷன் செய்து கொண்டும் விட்டேன்.

மூன்று பெண் குழந்தைகளும் இப்போது பெரியவர்களாகி விட்டார்கள். இந்தநாளில் அவர்களுக்குத் திருமணம் செய்து வைக்க எவ்வளவோ கஷ்டப்பட வேண்டியுள்ளது. ஆண் பிள்ளைகளைப் படிக்க வைக்க நிறைய திணற வேண்டியுள்ளது. இன்றோ என் கணவர் அதிகம் செலவாகிறது என்று தினமும் சத்தம் போடுகிறார். ஆனால் அன்றே அவர் திட்டமிட்டுக் குடும்பத்தை வைத்திருந்தால் இன்று இப்படிச் சொல்ல நேருமா? எவ்வளவுதான் சிக்கனமாக இருந்தாலும் அத்தியாவசிய செலவுகளை விடமுடியுமா? என் குழந்தைகளின் எதிர்காலத்தை நினைக்கும்போது மிகவும் பயமாக உள்ளது. அன்று அடுத்தடுத்து பிள்ளைகளைப் பெற வேண்டும் என்று வற்புறுத்திய என் வீட்டினர்களோ, மற்றவர்களோ எனக்கு உதவவா போகிறார்கள்? ஆணோ, பெண்ணோ இரண்டே குழந்தைகளுடன் நிறுத்திக் கொள்வதுதான் உத்தமம்.

-எல். கிரிஜா, செஞ்சி

(மீதி அடுத்த இதழில்)

# எல்லைகளின் விளிம்பில்...

வாஸந்தி

சிட்டுக் குருவிகள் தத்தித் தத்தி வந்தன. அங்குமிங்கும் கறுகறுப்பாகப் பார்த்தன. யாரும் நம்மைப் பார்க்கவில்லை என்கிற கணிப்பில் தரையில் கிடந்த அரிசி மணிகளை லாகவமாக அலகுகளில் ஏற்றிக் கொண்டன.

குறிப்பிட்ட சிந்தனை எதுவுமில்லாமல் அவைகளைப் பார்த்துக் கொண்டு நின்றிருந்த பாலு தன்னையுமறியாமல் ரொட்டி டப்பாவைத் திறந்து ஒரு ரொட்டித் துண்டைச் சின்னச் சின்னத் துண்டுகளாகச் செய்து வராண்டாவில் போட்டான்.

நமக்கு இவன் தோழனா, எதிரியா? என்று அளக்கிற மாதிரி குருவிகள் நிதானித்துப் பிறகு தைரியத்துடன் அருகில் வந்து சாப்பிட ஆரம்பித்தன.

அவற்றின் கறுகறுப்பையும் அசைவுகளின் லாகவத்தையும் பார்க்கும் போது முதல் முறையாகக் குருவிகளைப் பார்த்த மாதிரி அவனுள் பிரமிப்பேற்பட்டது.

''என்ன, பாரதியார்ன்னு நினைப்பா?'' அவன் திடுக்கிட்டுத் திரும்பிப் பார்த்தான். மாலு — ஜீன்ஸுக்கு மேல் முழுக்கை ஸ்வெட்டர். பளிச்சென்ற 'ப்ராமிஸ்' சிரிப்பு!

இன்று மாலை அவளை யாருடனோ ஸ்கூட்டரில் பார்த்தது சட்டென்று நினைவுக்கு வந்தது. அதை அவன் அவசரமாக ஒதுக்கி விட்டுப் புன்னகைத்தான்.

''பாரதிக்கும் எனக்கும் என்ன?''

''அவர் இப்படித்தான் வீட்டிலிருந்த அரிசியையெல்லாம் குருவிக்குப் போட்டுடுவாராம்!''

''நான் கொஞ்சம் புத்திசாலி. நமக்கு மிச்சம் இருக்கான்னு பார்த்துட்டுத்தான் குருவிக்குக் கொடுக்கிறேன். ஏய், யூ நோ ஸம்திங்? இந்த பாரதியார் பேரு கூட எனக்கு இன்னிக்கு இண்டர்வ்யூவிலே ஞாபகத்துக்கு வரல்லே. உனக்கு எப்படி ஞாபகம் இருக்கு?''

''ஏன்னா எனக்கு உன்னைவிட தமிழ் ஞானம் ஜாஸ்தி!''

''ரொம்பப் பெருமை அடிச்சுக்காதே. நீயும் இண்டர்வ்யூ போர்டுக்கு முன்னாலே உட்காரும்போது மறந்து போவே! இன்னிக்கு ஒரு தமிழ் இலக்கியவாதியோட பேர் சொல்லுன்னான். மதராஸ் பஸ்ஸிலே பாத்த திருக்குறள் ஞாபகம் வந்தது. ஆனா திருவள்ளுவர் பேரு சுத்தமா ஞாபகத்துக்கு வரல்லே! அதுக்குப் பதிலா திருவான்மியூர்னுதான் வந்தது!''

மாலு விழுந்து விழுந்து சிரித்தாள்.

''கவலைப்படாதே. உன்னைத்தான் ஸெலக்ட் செய்யப் போறா! தமிழ் வாத்தியார் வேலைக்கொண்ணும் இல்லையே இந்த வேலை?''



''இல்லே. அதான் பாரேன். எத்தனைப் பேத்தலான கேள்வி இது?''

''உன்னை ஆழம் பாக்கறு. அவ்வளவு தான். யாராவது தமிழன் இருந்திருப்பான் போர்டில். உனக்கு ஜெனரல் நாலட்ஜ் கொறைச்சலாயிருந்தா அவாளுக்கு நல்லது. அங்கே இங்கே புத்தி போகாமே அவா கொடுக்கற வேலையை ஒழுங்கா செய்வே!''

''அவா கேட்ட கேள்விக்கெல்லாம் கன்னுபின்னுன்னு பதில் சொல்லியிருக்கேன். வேலே கிடைக்காது!''

''அப்ப நிச்சயம் வேலைக் கிடைக்கும். ஒழுங்கா பதில் சொன்ன இடத்திலெல்லாம் எங்கே கிடைச்சுது?''

அவளுடைய வாதம் அவனுக்கு வேடிக்கை யாக இருந்தது. கூடவே ஒரு மிகச் சின்ன நம்பிக்கை ஒளி எட்டிப் பார்த்தது. இவள் நினைக்கிற மாதிரி அத்தனை பைத்தியக்காரர் களாக அவர்கள் இருக்கப் போகிறார்களா?''

''யூ மஸ்ட் பி க்ரேஸி மாலு!''

அவள் சிரித்தாள். அவன் தோளைத் தோழமையுடன் தட்டினாள்.

''இது ஒரு பைத்தியக்கார உலகம். இதிலே நீயும் பைத்தியமா இருந்தாத்தான் பிழைச்சுக்க முடியும்!''

அவள் குரலிலிருந்த ஏதோ ஒன்று அவனைத் தாக்கிற்று. இத்தனைச் சிரிப்பும் விளையாட்டும் வெளிப்போர்வை என்று தோன்றிற்று.

''உலகத்து மேலே உனக்கு ஏன் இத்தனை கோபம் மாலு?''

அவள் கண்களை அகல விரித்தாள்! ''வெறுப்பா? இல்லேயே. ஐ லவ் இட்! ஐ லவ் திஸ் லைஃப்! சண்டை போட்டு ஜெயிக்க வேண்டிய விஷயங்கள் இருந்தாத் தான் எனக்கு ரொம்ப மஜாவா இருக்கு!''

அவனுக்கு மறுபடியும் அன்று மாலை அவளை யாருடனே பார்த்தது நினைவுக்கு வந்தது.

''இன்னிக்கு சாயங்காலம் உன்னைப் பார்த் தேன் மாலு!''

''எங்கே?''

''ஷாஜஹான் ரோடிலே யாரோடேயோ ஸ்கூட்டர்லே போயிண்டிருந்தே!''

அவள் கள்ளமில்லாமல் சிரித்தாள்.

''ஓ, ஆமாம். பண்டாரா ரோடுக்குப் போயிருந்தேன். ஒரு ஃப்ரெண்டைப்பார்க்க. திரும்பி வரதுக்கு பஸ் ஸ்டாப்பிலே பஸ் ஸுக்காக ஒரு மணி நேரம் நின்னுண்டிருந் தேன். பஸ்ஸே வரல்லே. நல்லவேளை அந்த வழியா எம். ஏ.லே என்னோட படிச்ச அஜய் போயிண்டிருந்தான். லிஃப்டுக் கொடுன்னு நிறுத்தி ஏறிண்டேன். ஒரு வேடிக்கை. காலேஜ்லே படிக்கறச்சே லிஃப்ட் கொடுக்கிறேன்னு பின்னாடியே சுத்துவான். ஏறிக்கவே மாட்டேன்!''

''ஏன்?''

''படிக்கற சமயத்திலே அந்த மாதிரிப் போனா உடனே அவனுக்குக் கற்பனைகள் ஆரம்பிச்சுடும்.''

அவனுக்கு வேடிக்கையாக இருந்தது.

''இப்ப ஆரம்பிக்காதா?''

அவள் சிரித்தாள்.

''இப்பச் சான்ஸ் குறைச்சல்! இப்ப கொஞ்சம் பொறுப்பும் இருக்கும்!''

அவன் திடீரென்று பெரிதாக சிரித்தான்.



''உன்னை அப்படிப் பார்த்தோன்னே எனக்கு என்ன தோணித்துத் தெரியுமா! நீ இந்த ஆளுக்காகத்தான் வெங்கடேசனை வேண்டாம்னு சொல்லிட்டேன்னு தோணித்து.''

அவள் ஒருவிநாடி திகைப்புடன் பார்த்து விட்டுப் பகபகவென்று சிரித்தாள்.

''நீயும் சரியான 'போர்'தான், பாட்டிம்மா மாதிரி முடிச்சுப் போட்டுண்டு. மைகாட்! நீ எப்படி அப்படி நினைச்சே?''

அவன் மழுப்பலாகச் சிரித்தான்.

''2 + 2 = 4—ன்னு நினைச்சேன்.''

''2 + 2 = 4—தான். நீதான் 3—ன்னு நினைச்சிருக்கே மண்டு!''

அவள் செல்லமாக அவன் மண்டையில் அடித்தாள். பிறகு பெரிதாகச் சிரித்தாள்.




''பானு, எனக்குக் கொஞ்சம் கவலையாயிருக்கு. உனக்கு மூளை கலங்கிப் போயிடுத்தோன்னு. இதப்பார் வேலை கிடைக்கல்லேன்னு ரொம்பக் கவலைப்படாதே. நீ சும்மா கவலைப்பட்டு என்ன பிரயோஜனம்?''

மாலு தன் ஜோலியை கவனிக்க எழுந்து போனாள். வெகு நேரத்துக்கு அவளுடைய வார்த்தைகள் சுழன்று சுழன்று மனத்தில் நின்றன.

''நீ சும்மா கவலைப்பட்டு என்ன பிரயோஜனம்?''

''தட் இஸ் இட்'' என்று அவன் நினைத்துக் கொண்டான்.

கவலைப்பட்டு எந்தப் பிரயோஜனமும் இல்லை. வாய்தான் வார்த்தைகளை உச்சரித்தது. மனசு குட்டையிலேயே சுழன்றது.

மாலு வெகு சுலபமாகச் சொல்லிவிட்டாள் என்று தோன்றிற்று. இது வெறும் கவலையில்லை. உடனடியாக வேலை கிடைக்காவிட்டால் சோற்றுக்கு லாட்டரி என்கிற பிரச்னை இல்லை இது.

இது ஒரு தன்மானப் பிரச்னை. அதற்குத் திரும்பத் திரும்ப விழும் அடியினால் விளம்பியிருக்கும் பீதி — நல்ல ஸ்திரமான அஸ்திவாரத்தின் மேல் தான் நிற்கிறேன் என்கிற மிதப்பில் இருக்கையில் சரசரவென்று ஆற்று மணலாய் அடிசரிந்து, நிற்பவனைக் குழியில் புதைக்கிற மாதிரி — அந்தரத்தில் நின்று வேர்களைத் தேடுகிற பீதி இது. 'நன்னாப் படிச்சாத்தான் முன்னுக்கு வர முடியும், நல்ல மார்க் வாங்கினா உடனடியா வேலை கிடைக்கும்!' என்ற அப்பாவின் தர்ம உபதேசங்களை நம்பி விழுந்து விழுந்து படித்துப் பாஸ் செய்து இப்பொழுது அதே அப்பாவின் வாயினால் 'உத்தியோகத்துக்கே வழியைக் காணோம்...' என்று நையாண்டி செய்யப்படும் அவலம் இளைப்பும் பீதி இது... நம்பிக்கை வைத்திருந்த விஷயங்கள் எல்லாம் கேலிக் கூத்தாய் நிற்பதைக் கண்டு எழும் பீதி இது....

ஆபீஸிலிருந்து அப்பா வந்துவிட்டார்.

''இன்டர்வ்யூ எப்படிப் பண்ணினே?'' என்றார் நிதானமாக.

''திருப்திகரமாக இல்லை'' என்றான் அவன், ஆங்கிலத்தில்.

அப்பாவின் முகத்தில் இப்பொழுதெல்லாம் அடிக்கடித் தென்படுகிற கடுமை தெரிந்தது.

''உம்!'' ஒரு சின்ன உறுமலாக ஆரம்பித்தார். ''வெறுமனே படிச்சு மார்க் வாங்கினால் போறாது. பேசறதும் கேள்விக்கு பதில் சொல்றதும் ஒரு கலை. அது சுயமா இல்லேன்னா கஷ்டப்பட்டாவது செஞ்சுக்கணும். இன்டர்வ்யூவை நடத்தறவன் நம்மளைவிட வயசானவன், அனுபவஸ்தன், படிச்சவன் என்கிற நினைப்பு இருக்கணும். அந்த நினைப்பு இருந்தாத்தான் உனக்கு வினயத்தோட பதில் சொல்லவரும். உன்னைவிட நான் கெட்டிக்காரன்னு நீ மிதப்பா அவன்கிட்டப் பேசினியான்னா, அவனுக்கென்ன தலையெழுத்து உனக்கு வேலை கொடுக்கணும்னு?''

அவனுக்குள் சுறுசுறுவென்று ஆத்திரம் கிளம்பிற்று. அவன் வெகு கஷ்டப்பட்டுத் தன்னை அடக்கிக் கொண்டான்.

அவனுடைய இன்டர்வ்யூவைப் பற்றிய விவரங்களை அம்மா மாலுவின் மூலம் ஏற்கனவே இவர் அறிந்து கொண்டுதான் ஆத்திரப்படுகிறார் என்று அவனுக்குப் புரிந்தது. அவனிடமிருந்து எந்த விதமான பதிலையும் எதிர் பாராமல், தன் பேச்சை, தன் கோபத்தைத் தானே ரசித்து, அதற்குத் தூபம் போட்டுக் கொள்கிறமாதிரி தோன்றிற்று. அவன் விருக்கென்று எழுந்து வேறு அறைக்குச் சென்றான்.

''இந்தக் கோபம் மட்டும் இருக்கு அண்ணனுக்கும், தங்கைக்கும், வேறே ஒண்ணும் இல்லாட்டாலும்...''

இந்த வார்த்தைகள் ஏற்படுத்திய அவமானம் அடுத்த பத்து நாட்களுக்கு அவனைத் துரத்தித் துரத்தி வந்தது.

பதினோராம் நாள் நம்ப முடியாத ஒரு அதிசயம் ஏற்பட்டது. அவனுக்கு வேலைக்கு ஆர்டர் வந்தது. (தொடரும்)

**சீக்கிரம்! உங்கள் குழந்தையுடைய காயத்தின்**
**சிறந்த பாதுகாப்பிற்கு, உபயோகிப்பீர்**
**பாண்ட்-எய்ட் பிராண்டு டிரஸ்ஸிங்குகள்.**

**அவனது திறந்த காயத்தில் சிறிது அழுக்கு**
**இருந்தாலும் கூட தொற்றுப் பரவக் கூடும்.**



தொற்றுக்கு எதிராக, திறந்த காயங்களின் பாதுகாப்பிற்கு உலகெங்கிலும் உள்ள தாய்மார்கள் நம்புவது பாண்ட்-எய்ட் டிரஸ்ஸிங்குகள்.

பாண்ட்-எய்ட் டிரஸ்ஸிங்கில் உள்ள நிருபணமான ஆன்டிசெப்டிக், காயத்தை ஆற்றுவதற்கு உதவுகிறது. அதிலே: காற்றோட்டமளித்து விரைந்து ஆற்றும் நுண்துளைகள்; ஒட்டிக்கொள்ளாத வசதிமிக்க ஒப்பற்ற அடுக்கு.

காயங்களின் வெவ்வேறு வடிவம் மற்றும் அளவுகளுக்கு ஏற்ப வருகின்றன பாண்ட்-எய்ட் டிரஸ்ஸிங்குகள். பெரிய புண்கள், சிறிய வெட்டுக் காயங்கள், கட்டுப்போட முடியாத இடங்கள், கொப்புளம் மற்றும் சிராய்ப்புகளுக்கு எப்போதும் உங்கள் கைவசமிருக்கட்டும் பாண்ட்-எய்ட் டிரஸ்ஸிங்குகள்.




**பாண்ட்-எய்ட் பிராண்டு டிரஸ்ஸிங்குகள்.**

**தொற்றுக்கு எதிரான மிகவும்**
**நம்பகமான பாதுகாப்பு.**

Johnson & Johnson



OBM/9283

# கேதான் மின்விசிறி இந்தியாவிலேயே மிகச் சிறந்தது. ஏன்?

## 14 உறுதியான காரணங்களால்!

மின்விசிறி தயாரிப்புத் தொழில் நுட்பத்திலே சமீபத்திய சிறப்பான தயாரிப்பு, கேதான் பிரிமியம். இது இந்தியாவிலேயே மிகச் சிறந்த மின்விசிறியாகத் திகழ்வதற்குக் காரணங்கள் ஒன்றல்ல, இரண்டல்ல; 14 உள்ளன. இத்தனைச் சிறப்புகள் உள்ள வேறு மின்விசிறி ஏதாவது இருப்பின் எங்களுக்குத் தெரிவியுங்கள்.

**1** 30% குறைவாகவே மின்சாரத்தைச் செலவழிக்கிறது. ஆகவே மாதம் 10 ரூபாய் லாபம்.

**2** I.S.I. நிர்ணயித்துள்ளதைவிட 10% அதிக அளவு காற்று.

**3** 32% அதிக செயல் திறன். ஒவ்வொரு வாட் மின்சாரத்திற்கும் அதிக அளவு காற்று.

**4** சக்தி வாய்ந்த 18-போல் மோட்டாரின் சிறப்பான செயலாற்றல்.

**5** சென்ட்ரிஃபுகல் முறையில் டை-காஸ்ட் செய்யப்பட்ட ரோட்டாரின் உறுதியான உச்சநிலை செயலாற்றல்.

**6** மெஷின் மூலம் கம்பிகள் சுற்றப்பட்ட ஸ்டேட்டரின் திறமையான செயலாக்கம்.

**7** நீண்ட ஆயுள் மோட்டார்—குறைவாகவே சூடு ஏறுகிறது.

**8** ப்ரி-லோடிங் முறையில் அமைக்கப் பட்ட இரட்டை பால்-பேரிங்குகள், தேய்மானத்தைத் தடுக்கின்றன.

**9** அகன்ற அலுமினிய பிளேடுகள் (முனையில் அகலம் 127 மி.மி.) அதிக அளவு காற்றை வீசுகின்றன.

**10** உங்களுக்குத் தேவையான வேகத்தில் சுழலச் செய்ய, சரியான பொருத்தமுடைய ரெகுலேட்டர்.

**11** கடுமையான தரக்கட்டுப்பாடு உள்ளதால் அப்பழுக்கற்ற செயலாற்றல்.

**12** எவ்வித அலங்கார அமைப்புக்கும் பொருந்தக்கூடிய கவர்ச்சிகரமான வண்ணங்கள்.

**13** I.S.I. முத்திரை—தரத்திற்கு பழுதற்ற உறுதிமொழி.

**14** 5 வருட உத்திரவாதம்—சிறந்த தொழில் நுட்பத் திறனுக்கு உறுதியான அத்தாட்சி.







# கேதான்

உண்மையிலேயே முதன்மையான மின்விசிறி

HTC-SDL-5331-1

# தலைவலி தீர பத்து வழிகள்

நியூயார்க் மௌண்ட் ஸினாய் மெடிகல் சென்டரில் நியூராலஜி அசோஸியேட் புரொபஸராகவுள்ள டாக்டர் ஜாக் ஸ்டோக் கிராப்ட்ஸ் என்பவர். ''இண்டர்நேஷனல் ஹெட்ஏக் ஏஜென்ஸி'' என்னும் புது ஆராய்ச்சிக்குழுவின் பிரஸிடென்டாக உள்ளவர். இவர் பல மனிதர்களின் தலைவலியைப் பற்றி ஆராய்ந்து சில குறிப்புகளைக் கூறுகிறார்.

1. சிலவகை ஆகாரங்கள் சாப்பிடுவதாலும், சிலவகை பானங்கள் அருந்துவதாலும் ஏற்படும் தலைவலி. அதிக அளவு சர்க்கரை, ஷார்ப் சீஸ், போர்க், மீன், வாழைப்பழம், சிலவித உலர்ந்த கொட்டைகள் சில சமயம் யோகார்ட் கூட சில மனிதர்களுக்குத் தலைவலி உண்டாக்குகிறது.

நீங்கள் ஆகாரம் சாப்பிட்டபின் தலைவலியால் அவதியுற்றால் உங்கள் டயட்டில் மாறுதல் செய்து பாருங்கள். ரெட்வைன் தலைவலி ஏற்படுத்தும் என பிரசித்திப் பெற்றது. ஆனால் வைட் வைன் சாப்பிட்டால் பாதிக்காது.

அதிகமாக காபி அருந்துபவர்களுக்கும் தலைவலி ஏற்படும் வாய்ப்பு உள்ளது. இதிலுள்ள காபின் இரத்த ஓட்டத்தைவரையறுக்கிறது. காபின் இல்லாத மாதிரி காபி பிராண்ட் உபயோகிக்கலாம். டீயும் கோலாவும் இதே மாதிரி காபின் ஏற்படுத்தும் தலைவலி உண்டாக்குவதில்லை என்றாலும் ஐஸ் டீ அல்லது கோல்ட் சோடா, அதிகமாக அருந்தினால் தலைவலி ஏற்படலாம்.

2. டயட்டில் இருப்பது. உபவாசம் இருப்பது.

இவர்கள் ஆகாரம் சாப்பிடுவதில் மாறுதல் ஏற்படுத்துவதால் தலைவலி உண்டாகிறது.

3. கண்டபடி தூங்கும் முறை! வாரம் முழுவதும் நீங்கள் அதிகாலையில் எழுந்து வேலைக்கு ரெடியாகிறீர்கள். அல்லது குழந்தைகளைப் பள்ளிக்குத் தயார் செய்கிறீர்கள். வாரக் கடைசியில் நல்ல தூக்கம் போடுகிறீர்கள். இந்த அதிகப்படி தூக்கம் நமக்கு சோர்வையும் தலைவலியையும் உண்டாக்குகிறது.

4. ஒரே இடத்தில் நின்று கொண்டே இருப்பதாலும், உட்கார்ந்தபடி இருப்பதாலும் தலைவலி உண்டாகும். எழுந்து அடிக்கடி சுற்றிலும் நடக்க வேண்டும்.

5. சூரிய வெளிச்சத்தில் அதிகமாக மூழ்குதல். குளிர் காலத்தில் கூட நேர்முகமான சூரிய வெளிச்சத்தில் அதிகம் இருப்பது தலைவலி ஏற்படுத்தும். முக்கியமாக வயதானவர்களுக்கு வெளிச்சத்தில் எதிர்பாராத மாறுதல் ஏற்பட்டாலும் தலைவலி உண்டாகும். இருட்டான சினிமா தியேட்டரிலிருந்து கூசும் மத்யான வெளிச்சத்துக்கு வருதல், சூரிய ஒளி முகத்தில் படும்படி அதிக நேரம் காரில், பஸ்ஸில் செல்வது போன்றவை. இதைத் தவிர்க்க எளிய வழி கூலிங் க்ளாஸ் அணிவதுதான்.

6. உடல் பயிற்சியை அதிக அளவுசெய்வது. நிறைய விளையாட்டு வீரர்கள் பழக்கமில்லாத விளையாட்டில் ஈடுபட்டுத் தலைவலியால் அவதியுறுகிறார்கள். உடல் பயிற்சி செய்யு முன்பு நீங்கள் சாதாரண சில பயிற்சிகள் செய்ய வேண்டும்.

7. போக்குவரத்து நெரிசல் உள்ள சாலைகளில் கார் ஓட்டுவது தலைவலி உண்டாக்கும் இங்குள்ள கார்பன் மோனாக்ஸைட் தலைவலிக்குக் காரணமாகும். போக்குவரத்து நெரிசலை தவிர்த்து வேறு வழியில் நீங்கள் செல்ல இயலுமானால் அப்படிச் செய்வதே நல்லது.

8. சத்தம் கூச்சல் உள்ள இடங்களுக்குப் போவது. சத்தம் அதிகமானால் காதும் பாதிக்கப்படும், தலையும் பாதிக்கப்படும்.

டிஸ்கோவிற்குப் போகத் தயாராகுமுன்பு இரண்டு தடவை யோசனை செய்து பாருங்கள். இதற்கு பதில் அமைதியாகச் சினிமா பார்க்கச் செல்லலாம். வயது ஏறினால் சத்தம் அதிகப் பிரச்சினைகளை ஏற்படுத்தும்.

9. படுக்கையிலிருந்து மிக வேகமாக எழுந்திருப்பது. நிறைய தலைவலிகள் கவலையினாலோ மன அழுத்தத்தாலோ வருவதில்லை. இவை நாம் மிகவும் ஓய்வாக இருக்கும் பொழுது. அதுவும் அதிகபட்சம் காலையில் ஆரம்பித்து விடும். இதன் காரணம் இரத்த ஓட்டம்.

10. உஷ்ண மாறுதல்களுக்கு அதிக அளவில் உள்படுவதால் உண்டாகும் தலைவலி. டெம்பரேச்சர் குறைந்தால் நிறையப் பேருக்குத் தலைவலிக்கும். இதைத் தவிர ஏர் கண்டிஷன் ரூமிலிருந்து சூடான இறுக்கமான வெளி உலகத்துக்கு வந்தால், அல்லது புகை சூழ்ந்த காற்று வெளிப் போக வழியில்லாத அறைகளில் இருந்தால் தலைவலி ஏற்படுகிறது.



தாயிடமிருந்து குழந்தைகள் உண்டாகும். இங்கோ குழந்தைகளுக்காகத் தாய் உண்டாகியிருக்கிறாள்! தேவக் குழந்தையரை பண்டனிடமிருந்து காத்து அவர்களுக்குரிய ஆதிபத்தியத்தை மீளவும் பெற்றுத் தரவே 'ஆதியாய் அநாதியாய் அகண்ட அறிவாய்' உள்ள பரப்ரம்ம சைதன்யமாம் பராசக்தி ஸ்ரீமாதாவான சீரெழில் லலிதாவாக உதித்திருக்கிறாள். ''தேவ கார்ய ஸமுத்யதா''— தேவர்களுக்கானதைச் செய்யவே உற்பவித்தவள் — என்று ஸஹஸ்ரநாமத்தில் பெயரிடப்படுபவள். அவர்கள் வேண்டிய வரத்தை வாயார நல்கியவுடன் அவர்களுடைய மகிழ்ச்சியும் பக்தி நெகிழ்ச்சியும் பெருகின.

அந்த வரநாயகியையே தங்களது நாயகியாகக் கொண்டனர்.

நாயகி எனில் அவளுக்கெனத் தலைநகர் இருக்க வேண்டும்; அவளுக்கு ஒரு நாயகனும் இருக்க வேண்டும். (இலக்கிய ரீதியில் பார்த்தாலுங்கூடக் கதாநாயகி இருந்தால் கதாநாயகனும் இருந்தாக வேண்டாமோ?)

இந்திராதி தேவர் மட்டுமல்ல. அவர்கள் விரும்பிய பண்ட வதத்தை (அவனுடைய ஸாமர்த்தியமான வரம் காரணமாகச்) செய்ய முடியாத பிரம்ம விஷ்ணுக்களும்கூட இப்போது அவளது தலைமையை ஏற்க வந்துவிட்டனர். 'விண்ணவர் யாவரும்





வந்திறைஞ்சிப் பேணு நற்கன்னிய எம்பெருமாட்டிக்'கென வாஸஸ்தானம் அமைக்கும் பணியை தேவ தச்சனான விச்வகர்மாவுக்கு பிரம்மா அளித்தார்.

மனோசக்தி கொண்டே மாளிகையும் சூளிகையும் நிர்மாணிப்பதற்குத் திறம் பெற்ற விச்வகர்மா உடனே அம்பிகைக் கென ஓர் அற்புதமான ராஜதானியையும்; அதிலே ஆறெழில் கொஞ்சும் ஒரு ராஜக்ருஹத்தையும், அதில் ஆற்றல்பீடமானதொரு ராஜ ஸிம்மாதனத்தையும் படைத்து விட்டான்.

ஆனால் ராஜன் எங்கே? ராணிதானே இருக்கிறாள்?

இந்த நிலைகண்டு பிரம்மா சிந்தித்தார். ''பத்தினியில்லாத ஆடவன், பதியில்லாத பெண்மணி ஆகிய இருவருமே ஆட்சியதிகாரம் பெற அருகர் அல்லரென்பது வேத மரபு. (தேவ தேவியானாலும் கூட வேத மரபைப் பற்றியே ஒழுக வேண்டும் என்று இதிலிருந்து ஏற்படுகிறதல்லவா? பரம் பொருளே தான் வகுத்த சட்டத்துக்கு அடங்கிக் காட்டும் அறநெறி, அடக்கப் பண்பு!) மங்களமான நல்வழியில் செல்லும் தம்பதியர்தாம் அரச கட்டில் ஏற உரிமை பெற்றவர். சிருங்கார ஸௌந்தர்யமே உருக் கொண்டாற்போன்ற இந்த உத்தமோத்தமிக்குத் தகுந்த நாயகன் யார்? வேறு யாராயிருக்க முடியும்? மங்களம் யாவும் கொழிக்கும் இவளை ஸுமங்கலி என்ற ஸ்தானத்தில் கௌரவிக்கக் கூடியவன் சிவன் ஒருவன்தான். 'சிவம்' என்றாலே 'மங்களம்' என்று பொருளாயிற்றே! ஆனால் துரதிர்ஷ்டவசமாக அந்தச் சிவனே யாக குண்டத்தில் ஸதி தாக்ஷாயணி பிராணத் தியாகம் செய்த நாள் தொட்டு வைராக்கிய யோகியாகி விட்டான்! அதனால் அமங்களனாகத் தோன்றுமாறு மயான வாசியாக, சடைமுடியும் சாம்பற் பூச்சும், முண்ட மாலையும் கபாலக் கரமும் கொண்டவனாக அல்லவா ஆதி மோனத் தவமிருக்கிறான்? அந்த ஸதியே பார்வதியாய் வந்து பணி செய்தும் அவளைப் பாராது, பார்வையினாலேயே காமனை எரித்துவிட்டல்லவோ உட்கார்ந்திருக்கிறான்? அவனை எப்படி இவளுக்கு நாயகனாக்குவது?

ஒன்றேயான பரம்பொருள் இரண்டு போலச் சிவமும் சக்தியுமாகி, பின்னர் ஆதி தம்பதியர் தமக்குள் ஆடிக் கொள்ளும் சேர்க்கை — பிரிவு விளையாடல்களை யாரே அறிய முடியும்? சதுர்முகனே அறிய முடியாத இந்தப் புதிரை நாமும் புரிந்து கொள்ள முடியாதுதான். யோகி தக்ஷிணா மூர்த்தி அங்கே இமாசலத்தில் தாபத் தபஸ் புரியும் பார்வதியிடம் பரிவு காட்டாத மர்மம் எப்படிப் புரியும்? அதே போதில் அதே சக்தி இங்கே நமது கதாநாயகி லலிதையாகவும் இன்னோர் உருவில் தோன்றி, இவளுக்கேற்ற பதி அவனே என நான்முகன் நிச்சயித்தவுடன் நம்முடைய சதையை மேலே நடத்திக் கொடுப்பதற்காகப் அவன் பரம கருணை கொண்டதன் ரகசியமும் நமக்குப் புரியாததுதான்!

ஆகக்கூடி, நடந்தது என்னவெனில்; மமதை மிக்க தக்ஷன் செய்த யக்ஞத்தில் உயிர்த் தியாகம் செய்த சக்தியே, மமகாரம் அடியோடு அழித்த வானவர் தமது உயிரைத் தியாகம் செய்த யக்ஞ குண்டத்திலிருந்து திரிபுரையாகத் தோன்றியிருக்கும்போது, திரிபுராந்தகன் அவளது கரம் பிடிக்க வந்தேவிட்டான்! ஆம், அவளுக்காக நிர்மாணிக்கப்பட்டுள்ள ராஜ ஸதனத்துக்கு எழுந்தருளி விட்டான்!

அமங்களக் கோலம் விட்டு அதிமங்களனாக வந்தான் ஆதிசிவன்.

மதனாந்தகன் கோடி மதன லாவண்யனாக வந்ததாகப் புராணம் சொல்கிறது. நிகம் பரன் திவ்யவஸ்திரதரனாக வந்தானாம். மேனியிலே சாம்பலுக்குப் பதில் களப சாந்தம். முண்டமாலையினிடத்தில் மலராரங்கள் மணக்கின்றன. இப்போது இவன் சடைமுடியனல்ல. கிரீட பூஷணனுக்கும்! பாம்புகளுக்குப் பதில் நவரத்னத்தினாலான குண்டல கேயூராதிகள்.

அசல் ஞானவாள மாப்பிள்ளையாக வந்த ஜகன் மோஹனனை பிரம்மன் அப்படியே கட்டித் தழுவிக் கொண்டான்.

காமாரியான அவனுக்குக் காமேச்வரனென்று நாமகரணமும் செய்தான். காமேச்வரியை மணக்கவேண்டியவனுக்கு வேறென்ன பெயரிடுவது?

பார்வதியாக அவதரித்த பராசக்தி அடங்கிப் பணி புரிந்ததால் அந்த அடக்க எழிலே மேலும் சோபித்துத் துலக்கவே அவளை அலக்ஷ்யம் செய்த பரமேச்வரன், சிருங்கார மதர்ப்பாக அவளே செழித்து அதிகாரத்துடன் நமது கதாநாயகியாய் வந்தபோது தானுமே சிருங்கார நாயகனானான். பார்வதி போல இவள் அவனிடம் பிரேமித்துத் தவிக்கவில்லை, தவமிருக்கவில்லை. இவளுக்கு சுய ஆசை, அபிலாஷை எதுவுமில்லை. தேவ காரியத்துக்காகவே வந்தாள். சக்தி கொந்தளிக்க வந்தாள். சிவம் தன்னால் அச்சக்தியிடம் இழுபட்டது!

ஸ்படிகமாகிய சிவம் காமேச்வரனாகச் சிவந்தது. ஆம், அவளைப் போலவே நிறம், கொண்டு, அவளது ஆயுதங்களான தநுர் பாண, பாச, அங்குசங்களையே சிவன் இப்போது தரித்திருக்கிறான். அவளோ இவனைப் போலத் தானும் நெற்றியில் மூன்றும் கண் படைத்த திரிலோசனியாகவும், மகுடத்தில் பிறை மதியம் சூடிய சந்திரசேகரியாகவும் ஆகியிருக்கிறாள். முப்புரங்களாகிய ஸ்தூல, சூக்ஷ்ம, காரண சரீரங்களிலுள்ள 'நான்' என்னும் தடிப்பை எரித்த திரிபுராந்தகன் இதே முப்புரங்களின் உள்ளும் மூல தெய்விக ரஸத்தை உணரச் செய்யும் திரிபுரஸுந்தரியோடு இணை சேர்வதன் எழிலே இதுவெல்லாம்! காமாந்தகனே லோக விலக்காகவும், ஜீவர்கள் படிப்படியான பரிணாம பக்குவத்தில் உய்வு பெறுவதற்காகவும் காமேச்வரியுடன் காமேச்வரனாகப் பிணைய வந்ததன் விநோதமே சதெல்லாம்!

காமேச்வரனும் காமேச்வரியும் ஒருவரையொருவர் கண்ட மாத்திரத்தில்... சொல்லவும் வேண்டுமா? பிரேமாவேசம் கொண்டனர்.

ஆயினும் தன்னை இவள்' இப்படி இழுப்பதா என்று மாப்பிள்ளை பிகுவுடன் ஐயன் மனத்தை அடக்கிக் கொண்டான். அவளோ இன்னமும் ஒருபடி தீவிரமாகவே தன்னைக் கட்டுப்படுத்திக் கொண்டாள். தன்னுடைய பார்வதி ரூபத்தை அலக்ஷ்யப் படுத்துபவனைச் சற்றுப் பழி வாங்கிப் பார்ப்போமே என்று எண்ணினாள் போலிருக்கிறது!

இதுவொன்றும் தெரியாத பிரம்மா, சக்தி எப்படியும் சிவத்தைக் கூடத்தான் செய்யும் என்று மட்டும் தெரிந்து கொண்டிருந்தார். மஹாமாதாவுக்கு — கன்னிகையாக உள்ள இப்போதே மஹாமாதாவாகவும் இருக்கும் அவளுக்கு — தாம் இதைச் சொல்வது அநுசிதம் என்பதால் நயமுற அவனிடம் விண்ணப்பித்துக் கொண்டார்: ''தேவ, கந்தர்வர்களும், அப்ஸர கணங்களும், ரிஷிகளோடு இங்கு கூடியிருக்கிறோம். எதற்காக? இதோ இந்த ஸிம்ஹாஸனத்தில் நீ உன் பதியுடன் வீற்றிருந்து எங்களுக்கு ராஜ்யபாரம் வகிப்பதைக் கண் குளிரக் காணத்தான் குழுமியிருக்கிறோம். நீ பதிவை வரித்து இல்லறம் ஏற்பது உலகுக்கெல்லாம் நல்லுதாரணம் படைக்கும். லோக ஸம்ரக்ஷணத்துக்காக நீ இவ்


*The following particulars regarding the ownership of 'MANGAYAR MALAR' the Tamil monthly newspaper, are published, as called for by Rule 8 of the Registration of Newspapers (Central) Rules 1956.*

FORM IV

1. *Place of Publication*: Madras
2. *Periodicity of Publication*: Monthly
3. *Name of Printer*: V. Murali
   *Nationality*: Indian
   *Address*: AA-117, Shanthi Colony
   Anna Nagar
   Madras-600 040
4. *Name of Publisher*: V. Murali
   *Nationality*: Indian
   *Address*: AA-117, Shanthi Colony
   Anna Nagar
   Madras-600 040
5. *Name of Editor*: V. Murali
   *Nationality*: Indian
   *Address*: AA-117 Shanthi Colony
   Anna Nagar
   Madras-600 040
6. *Names and addresses of individuals who own the newspaper and partners or shareholders holding more than one per cent of the total capital*: Bharathan Publications Private Limited (Lessees) 84/1-C, Race Course Road, Guindy, Madras-600 032

V. Murali
*Publisher*

1-3-1984

வருள் புரிய வேண்டும். உன்னால் வரிக்கப்படும் மஹா பாக்யம் பெற்ற புமான் எவனோ அவனைக் கரம் பிடித்து அரச கட்டில் ஏறி மஹாராக்ஞி ஆவாய். உனக்கு பட்டாபிஷேகம் செய்யவே காத்துக்கொண்டிருக்கும் தேவர்களுக்கும் ரிஷிகளுக்கும் இஷ்டபூர்த்தியை அநுக்ரஹிப்பாய்.''

இப்படிச் சொன்ன பிரம்மாவையும், உடனிருந்த விஷ்ணுவையும் மற்ற எல்லா தேவர்களையும் ஒரு சேரப் பார்த்த தேவி மந்தஹாஸம் புரிந்தாள். ''தேவர்காள்! நான் எவருடைய ஏவலுக்கும் கட்டுப்படாத ஸ்வதந்திரை. என் விருப்பப்படி ஸ்வயேச்சையாக நடப்பவள். இதற்கேற்ற குணப்பாங்கு உள்ளவனே எனக்குப் பிரியனை பதியாக முடியும்'' என்றாள்.

பராசக்தியை அவள் லீலைப்படியே பூர்ண ஸ்வதந்திரத்துடன் விடக் கூடியவன் பரப்பிரம்ம வடிவனான பரசிவன் ஒருவன்தான். மனம் கடந்த ஆத்மனான அவன் அவளில் கரைந்தும் கரையாமல் நின்று மஹாமனமான அவள் புனையும் லீலையில் தானும் ஈடுபட்டாற்போல் நடிப்பான். ஆயின் உண்மையிலோ அவனும் ஸ்வதந்திரனாகவே வெட்ட வெளிபோல எதிலும் பட்டுக் கொள்ளாமல் அகண்டமாயிருப்பவன். அதாவது அவளைப் போலவே ஸ்வதந்திரன்; அவனுடைய ஸ்வதந்திரத்திலும் குறுக்கிடாதவன்.

அவனைக் குறிப்பிடாமலே பிரம்மன் பேசினானெனில், அதற்கு அம்பாளும் அதிநயமாக இப்படிப் பதில் சொல்லி விட்டாள்.

மேலே? காமேச்வரன் தன்னை அவளுக்கு வரனாக விண்ணப்பித்துக் கொண்டு மணமாலைக்குக் கழுத்தை நீட்டுவானா? மாட்டான். தன்னை மணக்கலாமென அவளுக்கு யோசனை சொல்வதுங்கூட அவளுடைய ஸ்வதந்திரத்தில், ஸ்வயேச்சையில் குறுக்கிடுவதுதானே? எனவே இவளேதான் அவனை வரிக்க வேண்டும்.

இதையும் உடைத்துச் சொல்லாமல் வெகு நயமாய் அவளிடம் நான்முகன் விண்ணப்பித்துக் கொண்டான். ''அம்மா, நீ யார்? என்றும் மாறாத 'ஸத்'தை பிரம்மம் என்றும், மாறுதல் மயமான உலகை நடத்தும் 'சித்' விலாஸத்தை பிரகிருதி என்றும் சொல்கிறார்களெனினும், இந்த இரண்டும் கூட இணை பிரியாது ஒருமித்த ஏகம்தான். அந்த ஏகமான பிரம்மமும் பிரகிருதியும் நீயே தான். (சிவம், சக்தி என்ற பெயர்களைச் சொல்லாமல் அதே தத்வங்களை பிரம்மம், பிரகிருதி என்று கூறியதில் தான் பிரம்மாவின் உரைநயம் இருக்கிறது. லீலைக்காகவே இப்போது பிரிந்ததுபோல ஈருருவங்களிலுள்ள இவை ஒன்று சேருவது தான் தேவர் விரும்பிய திருக்கல்யாணம்!) அப்படிப்பட்ட நீ உன் இச்சைப்படிதான் மணாளனை வரிக்க வேண்டும். இவ்வாறு சுயேச்சைத் தேர்வு செய்து கொள்வதையும் உன் போன்றோர் விஷயத்தில் 'காந்தர்வ விவாஹம்' என்பதாக சாஸ்திரம் அனுமதித்திருக்கிறது. தந்தையால் (அல்லது அந்த ஸ்தானத்தில் உள்ள ஒரு பெரியவரால்) 'பித்ருதத்தை'யாகக் கன்யாதானம் செய்வதற்கில்லாத ஒரு பெண் காந்தர்வ மணம் புரிந்து கொள்ளலாமென்பது சாஸ்திரம். உனக்குத் தந்தையில்லை; உன்னை விடப் பெரியவரும் இல்லை. எனவே லோகாநுக்ரஹத்துக்காக நீயே காந்தர்வ விதிப்படி பர்த்தாவைத் தேர்வு செய்து கொள்ள வேணும்.''

பிரம்மா சாமர்த்தியமாக சமாளித்துவிட்டார். இப்போது தேவி மஹாதேவன் கழுத்தில் மாலையிட்டு விட வேண்டியதுதானே?

தங்களின் பிப்ரவரி மாத மங்கையர் மலரில் 73 ம் பக்கம் குத்துவிளக்கு வாங்குவதைப் பற்றிச் சிறுகுறிப்பு ஒன்று வெளியிட்டிருந்தீர்கள்.

பொதுவாகப் பாத்திரக் கடைகளில் குத்துவிளக்கு (பித்தளை (அ) எவர்சில்வர்) எடை போட்டு விற்கப்படுவதில்லை. அப்படியேதான் விற்கப்படுகிறது. மேலும் தற்போது எல்லாக் குத்துவிளக்குகளிலும் தண்டுப் பகுதியில் கட்டாயம் மண் இருக்கும். அந்தக் காலத்தில் காரீயத்தைக் காய்ச்சி ஊற்றி விடுவார்கள். தற்போது உள்ள விலைவாசியில் காரீயத்தை ஊற்றினால் கட்டுப்படியாகாது. ஆகையால்தான் மண்ணை அடைக்கிறார்கள். மற்றபடி மக்களை ஏமாற்றுவதற்கு அல்ல.

உதயன்.

ஆனால் அவள் அப்படிச் செய்யமாட்டாள். அங்கே ஹிமாலயத்தில் பார்வதியை அலட்சியப்படுத்துபவன், இங்கே இந்த ஸபைக்கு வந்தபோதிலும் பட்டுக்கொள்ளாமலே நிற்கிறான். அப்படியிருக்க அவள், சுதந்திரமானவள் என்று தன்னைச் சாற்றிக் கொண்டவள், தன்னைக் குறைத்துக்கொண்டு அவனை நாடிப் போய் மாலை சூட்டுவாளா?

அதனால் ஒரு யுக்தி செய்தாள். ''நான் புஷ்ப ஹாரத்தைச் சுழற்றி வீசுவேன். அது எவன் கழுத்தில் விழுமோ அவனே என் பர்த்தா'' என்றாள்.

இவளது இச்சா சக்தியால் தான் சகலப் பிரபஞ்சங்களும் சுழல்வது. எனவே அந்தப் பூமாலை இவள் இச்சையை மீறித் ''தற்செயலாக'' வேறெவர் கழுத்திலாவது விழமுடியுமா என்ன? சிவனைத் தவிர அனைவருமே அனைத்துமே அவளது குழந்தைகளாக இருக்க அவனைத் தவிர வேறு எவரை அந்த அலங்கல் அலங்கரிக்க முடியும்?

ஹாரத்தை வானத்தே வீசினாள் தேவி. அது ஒளி வீசிக் கொண்டு கீழ்நோக்கி வந்து நேராகக் காமேச்வரனின் காலகண்டத்தில் இறங்கி அழகு செய்தது. மங்கைநல்லாளின் மணமாலை கங்கைகொண்டானை எழில் செய்தது.

(தொடரும்)




"ஆராமுதனை பாடிப்பற
அயோத்தியர் வேந்தனை பாடிப்பற...''

எம். எஸ். பக்திப் பரவசத்தில் பாடிப் பரந்து கொண்டிருந்தார்.

'சட்'டென்று உறக்கம் கலைந்து விழித்தாள் பானு. உள்ளே அப்பா சந்தனம் அரைக்கும் ஒலி கேட்டது.

'ஆனாலும் அப்பாவுக்கு பிடிவாதம் அதிகம். இந்த மார்கழி குளிரில், இந்த மூன்று மணிக்கு எழுந்திருக்காவிட்டால் என்ன...?'

போர்வையை உதறிவிட்டு எழுந்த பானு அவசரம் அவசரமாகக் குளியலறைக்குள் புகுந்து கொண்டாள்.

வெந்நீர் அடுப்பு மங்கலான தீயில் கனன்று கொண்டிருந்தது. அப்பாவுக்கு ஆதுரம் அதிகம். பானுவுக்குக் குளிருமே என்று வெந்நீர் அடுப்பு புருபுருவென்று

பற்ற வைத்து, பகவான் திருமஞ்சனத்திற்கு குளிருமே என்று அடுப்பில் சூடாக வெந்நீர் வைப்பார். பிடிவாதமாகத் தான் மட்டும் பச்சைத் தண்ணீரில் தான் குளிப்பார்.

பானு குளித்து முடித்து, பனிச்சென்று நெற்றிக்கு இட்டுக் கொண்டு, அடுப்பை மூட்டிப் பொங்கலுக்கு வைத்தாள்.

''பல்லாண்டு பல்லாண்டு
பல்லாயிரத்தாண்டு...
பலகோடி நூறாயிரம்...''

அப்பா பக்தி சிரத்தையுடன் ஆராதனையில் ஈடுபடும்போது முப்பத்து முக்கோடி தேவரும் சிரத்திப்பது போல் தோன்றியது அவளுக்கு. முந்தையநாள் பறித்து தொடுத்துப் பக்குவமாக ஈரத்துணியில் சுற்றி வைத்திருந்த பூச்சரங்களை நறுக்கி, படங்களில் சாத்தினான்.

பால்காரன் வந்து விட்டதற்கான அறிகுறி. பாலை வாங்கி சூடாகக் காய்ச்சி,


காலில் சேற்றுப் புண், நீர்ப்புண் ஆகியவற்றிற்கு 'கடுக்காய் நல்ல' மருந்து. கடுக்காயும், மஞ்சளும் சேர்த்து அரைத்து நன்றாகத் தடவினால் இரண்டே நாளில் அரிப்பெல்லாம் போய் புண் ஆறும்!

எஸ். உமா.

இஞ்சி மணம் வீசும் பொங்கலையும் பாலையும் பெருமாள் சன்னதியில் வைத்தாள்.

இலையில் பொங்கலை வைக்கும்போது, எப்போதும் போல் அப்பா யோசனையில் ஆழ்ந்தார். அவர் கடந்த கால நினைவுகளை ஒருவித சந்தோஷத்துடன் நினைப்பதைஅவள் அறிவாள்.

திடுதிடுவென்று எரியும் அடுப்பில் அம்மா அந்தப் பெரிய கங்காளத்தை வைத்துப் புத்துருக்கு நெய்யைக் கொட்டி முந்திரிப் பருப்பு மிதக்க வெண்பொங்கலைக் கிளறி ஊர் சிறுவர் சிறுமியருக்கெல்லாம் கொடுப்பாள். அது அந்தக் காலம்!

அம்மாவின், மறைவுக்குப் பின் குடும்பமும் நொடிந்து இன்று சிறிய 'அரைக்கால் படி வெண்கலப் பானை' பொங்கலுடன் உலகளந்த பெருமாள் திருப்தி அடைகிறார்.

அப்பா ஒரு கர்மயோகி மட்டும் அல்ல-ஞானமார்க்கத்தில் செல்பவர். அவர் முகம் வாடி கண்டதில்லை பானு. அம்மாவின் மறைவை எவ்வளவு அழகாக, எளிமையான மனத்துடன் ஏற்றுக் கொண்டார் அவர்!

'அந்த ஜகன்னாதன், இந்த ஜகன்னாதனை வாட்டுகிறான்... என்ன செய்வது அம்மா..''

நடுவில் வீடும், சுற்றிலும் நந்தவனமுமாக இருந்த அந்த வீடு, ஒரு கேஸில் தோற்று, நிலபுலன்களை இழந்து, இந்த வாடகை வீட்டில் வசிக்க நேர்ந்த போதும் அப்பா முகத்தில் புன்சிரிப்பு தான்.

அப்பாவிடம் நிறைய படித்தாள் பானு. அவர் படித்த மாதிரியே வாழ்ந்து காட்டியதால், இளம் வயதிலேயே பானு பார்க்கும் வாழ்க்கையின் நிறங்களே வேறு!

'மனசு ரொம்ப சுத்தமா எளிமையா இருக்கணும்... நீ ஒரே ஒரு நிமிஷம் தினமும் பகவானை நினைத்து விட்டு உன் கடமைகளைச் செய்து வந்தாலே போதும்... உன் அம்மா அப்படித்தான் இருப்பாள்... சுபிக்ஷம் மனசில்தான் இருக்கு...''

அப்பா இல்லாமையை அவ்வளவு சந்தோஷத்துடன் ஏற்றுக் கொண்ட போது, பானுவுக்கு அவரும் ஒருநாள் இல்லாமல் போவார் என்பது புரியவே இல்லை...

அவர் வாழ்க்கையைப் போலவே சாவும் அமைதியாகத்தான் நிகழ்ந்தது.

''அம்மா... பானு...'' பாதி ஆராதனையில் அழைத்தார். துளசி தளங்களையும், சந்தனத்தையும் கொடுத்தார்.

''எதற்கும் பயப்படாதே! நான் உன்னைத் தன்னந்தனியே விட்டுவிட்டுப் போவதாகவும் நினைக்காதே! உன் அறிவும், பகவான் அருளுமே உனக்குப் பெருந்துணை!''

எல்லாம் முடிந்து விட்டது. ஊர் ஜனங்களும், உறவு என்று சொல்லக் கூடியவகையில் இருந்தவர்களும் ஒத்துழைத்துக் காரியங்களை முடித்தனர்.

இனி என்ன செய்வது?

தூரத்து உறவினரான சாமி பெரியப்பா அதையே கேட்டபோது அவள் கொஞ்சம் யோசித்தாள்.

''ஒன்றும் யோசிக்காதே அம்மா. உன் அப்பா அந்தக் காலத்தில் எனக்கு வலதுகையாக இருந்திருக்கிறான். பலன் எதிர்பாராமல் உதவியிருக்கிறான். தெய்வமே எனக்கு இப்படி ஒரு சந்தர்ப்பம் கொடுத்திருக்கிறது... என்னுடன் வந்துவிடு... வீட்டில் இடமா இல்லை....''

''எனக்கு ஒரு மாதம் 'டைம்' கொடுங்கள் பெரியப்பா...''

அந்த ஒரு மாதத்தில் அவள் செய்ய வேண்டியவை நிறைய இருந்தன.

பரண் நிறைய, அம்மா ஆண்டு அனுபவித்த பெரிய பெரிய பாத்திரங்கள்.

இத்தனை நாள் சும்மா வேலையற்று அவற்றை வைத்திருந்தது போல், இனியும் வைத்திருப்பதில் எந்த விதத்தில் நியாயம் இருக்கிறது....

அவற்றை மனமுவந்து அந்த ஊரின் கல்யாண மண்டபத்திற்குப் பரிசாக அளித்தாள். அப்பாவின் புத்தகங்கள் அனைத்தும் ஊர்ப் பெரிய லைப்ரரிக்கு இடம் பெயர்ந்

தனை. தட்டுமுட்டுச் சாமான்களை வேண்டியவர்களுக்குத் தானம் செய்தாள்.

மீதி இருந்த, அவளுக்குத் தேவையான சாமான்களை ஒரு பெட்டியில் அடுக்கி வைத்துக் கொண்டு, காத்து நின்ற பெரியப்பாவுடன் பயணப்பட்டாள்.

**நா**ளே பிரணவ மந்திரம் என்பது போல் காலையில் முதன் முதலில் ஹுங்கார மிடும் கறவைப்பசு.

நுரை ததும்ப இரண்டு பெரிய பாத்திரங்களில் கறந்த பாலை எடுத்து வரும் கோனார், பாதி பாலை அப்படியே தன்னுடன் கொண்டு வந்திருந்த பாத்திரத்தில் ஊற்றி மறைவாக எடுத்துப் போவான்.

அந்த நுரைப்பாலில் முழுதாக ஒரு டம்ளர், பாலை எடுத்துப் போக வரும் சமையற்காரியின் வயிற்றினுள் இடம் பெயரும்.

காலை ஐந்து மணிக்கெல்லாம் எழுந்திருந்து, பொழுது போகாமல் பூக்கள் பாத்தியின் மத்தியில் விடிவெள்ளியைப் பார்த்து நிற்கும் பானுவின் கண்களில் இவை படும் போது அவளுக்கு ஆச்சரியமாக இருக்கும்.

இதையெல்லாம் அருகிலிருந்து கவனிக்க வேண்டிய பெரியம்மா இரண்டடுக்கு மெத்தையில் ஆழ்ந்த உறக்கத்தில் இருப்பாள்.

மேல்மாடி அறையில் படுத்துறங்கும் பிள்ளை ஜெய்கர் எழுந்திருப்பது எட்டோ ஒன்பதோ... பின்பு அடித்துப் பிடித்து, சமையற்காரி கடனே என்று போடும் உணவைத் திட்டு வசவுகளுடன் உண்டுவிட்டு அலுவலகத்திற்குப் பறப்பான்.

இதையெல்லாம் கண்டும் காணாதவராய் சாயி பெரியப்பா, காப்பி குடித்துவிட்டு, வெய்யில் லேசாகத் தெரிய மூடி இருக்கும் வெட்டிவேர் தட்டியின் முன்பு, பிரம்பு நாற்காலியில் பத்திரிகையில் ஆழ்ந்து விடுவார்.

பொய், புரட்டு மாத்திரம் தவறல்ல, அதற்கு சாட்சியாய் இருப்பதும் தவறு என்று அப்பா அடிக்கடி சொல்வாரே...

அன்று காலை குளித்து முடித்ததும் கோனார் பால் கறக்கும் சமயம் பவழமல்லி மலர்க் கூடையுடன் வாசற்படியில் நிழலோடு நிழலாக நின்ற பானு, அவன் வழக்கம் போல் தன் பாத்திரத்தில் மறைவாகப் பாலை ஊற்றிக் கொள்ளும் சமயம் கனிந்த குரலில், ''இன்னும் ஒரு ஆழாக்குக் கூடவே ஊற்றிக் கொள்ளுங்கள்...'' என்று கூறிய போது, அவன் பதறி திகைத்து அமிழ்ந்தே போனான்.

''அம்மா... தெரியாமல்... ஏதோ தெரியாமல்... இனிமேல் இப்படிச் செய்யவில்லை...'' கரம் கூப்பியவன், எடுத்தபாலை பாத்திரத்திலேயே ஊற்றி விட்டு இருளில் வேகமாக நடந்தான்.

தனக்குள் சிரித்துக் கொண்ட பானு, நுரைபாலில் ஒரு டம்ளர் ஊற்றி, அப்போதுதான் வெளியே வந்த சமையற்காரியிடம் கொடுத்தாள்.

''சாப்பிடுங்கள் மாமி...''

செல்லம்மா அலமந்து போனாள்.

''குழந்தே... நீ...''

''பரவாயில்லை... தினமும் நீங்களே எடுத்துச் சாப்பிடுகிறீர்கள்... இன்று நான் கொடுக்கிறேன்... ஏன்... உங்களுக்கு நான் செய்யக் கூடாதா...?''

செல்லம்மா கண்கலங்கத் தலைகுனிந்தாள்.

''ஏதோ இல்லாத கோளாறு... நான் வாழ்ந்து கெட்டவள்... இதை யாரிடமும் சொல்லிவிடாதே...''

அவள் பாலை வாங்கிக் கொண்டு சமையலறைக்குள் நுழைந்தாள்.

பானு தன்னுள் சிரித்துக் கொண்டாள்.

'சுபிக்ஷம் மனதுக்குள் தான் இருக்கிறது' என்ற அப்பாவின் வார்த்தைகள் ஒரு சிலிர்ப்பை ஏற்படுத்தின.

பரங்கியை சிறு துண்டங்களாக வெட்டி அரை ஸ்பூன் எண்ணெயோடு கொஞ்சம் நீர் தெளித்து வாணலியில் வதக்கிக் கொள்ளுங்கள். கொஞ்சம் கடலைப்பருப்பு, து. பருப்பு, மிளகாய் (தேவையான அளவு) ஆகியவற்றையும் சிவக்க வறுத்து உப்போடு சேர்த்து அரைத்து எடுத்து, கடுகு தாளித்து விடுங்கள். பரங்கிக்காய் சட்னி ரெடி!

எஸ். உமா

'இந்த ஜெய்கருக்கு, கண்டிப்பும் காவலும் இல்லாத நோய்...'

ஆனால் இந்தப் பெரியம்மாவுக்கு என்ன வந்தது?' என்று தோன்றியது பானுவுக்கு.

மணி ஏழடித்தும் இன்னும் பெரியம்மா எழுந்திருக்கவில்லை.

மெதுவாக அவள் அறைக் கதவைத் திறந்து உள்ளே நுழைந்த பானு திடுக்கிட்டாள். பெரியம்மா கண்களில் பொங்கும் நீரை அவசரமாகத் துடைத்துக் கொள்வது தெரிந்தது.

''உடம்பு சரியில்லையா பெரியம்மா...''

பானு வாஞ்சையுடன் கேட்டுக் கட்டில் ஓரத்தில் அமர்ந்தாள்.

''நேற்று கூட டாக்டர் சொன்னாரே நடமாட நடமாட சரியாகி விடும் என்று..''

''உம்...'' என்று முனகினாள். பெரியம்மா. ''என்னால் எங்கே முடியப்போகிறது...

பெரியம்மாவுக்கே ஆச்சரியமாக இருந்தது. காலே பால் வந்ததும், அரைமணிக்குள் சூடாகக் காப்பி கலந்து அவள் அறைக்கு எடுத்து வந்து விடுவாள் பானு. அறையினுள் இருக்கும் ''வாஷ் பேசினிலேயே, பல் தேய்த்து விட்டு காப்பி குடித்ததும்' பானுவின் கைத்தாங்கலில் படியிறங்கி, மெதுவாகத் தோட்டத்து நடைபாதையில் நடப்பாள். சில்லென்ற காற்றும், காது கேட்காமல் நுணுக்கமாக 'பட்'டென்று விரியும் மலர்களின் மனோகரமும், நறு மணமும், உண்மையிலேயே புதுத்தென்பைக் கொடுத்தன பெரியம்மாவுக்கு...

அதிசயத்திலும் அதிசயமாக பெரியப்பா சிலசமயம் வெட்டி வேர்த் தட்டியை சுருட்டி மேலே கட்டிவிட்டு விட்டு இவர்களைப் பார்த்தவாறு உட்கார்ந்திருப்பதும் உண்டு.

பின்பு பதமான சூட்டில் குளியல், மத்தியான வேளைகளில் புத்தகங்களிலிருந்து கதைகள் படித்துக் காண்பிப்பாள் பானு.

ஒருநாள், சாப்பிட்டு முடித்து விட்டு ஆயாசத்துடன் படுத்துக் கொண்ட பெரியம்மா மெதுவாக, ''பானு... இப்படி பக்கத்தில் உட்கார்ந்து கொள்...'' என்றுள் பானு. பெரியம்மாவின் கைகளைத் தன்னுள் அடக்கிக் கொண்டு அருகில் அமர்ந்து கொண்டாள்.

''பானு! உனக்கு ரமணியைத் தெரியுமா...?''

பானுவுக்குப் புதிராக இருந்தது.

''அதோ! அந்த அலமாரியில் ஆல்பம் இருக்கு பார்... அதை எடு...''



6

மாலை நேரத்தில் வழக்கம் போல் மாடியில் ஜெய்கரின் அறையில் கும்மாளமும் பாட்டும் காதைப் பிளந்தன.

''அவன் வந்து தொலைச்சாச்சு...

சமையற்கார செல்லம்மாள் முணுமுணுத்தாள். அவள் குறிப்பிட்ட அவனைப் பல முறை பார்த்திருக்கிறாள் பானு.

முகத்திற்குப் பொருந்தாத தலைமுடியும், கண்ணாடியும், வாயில் சிகரெட்டுமாக அவன் பல மாலை நேரங்களை, ஜெய்கரின் அறையில் 'நிம்மதி'யாகக் கழித்தான்.

பலத்த ஓசையுடன் ரிகார்டுகள்! நாகத்திற்கும் உண்டு என்பதை பலமுறை கண்டிருக்கிறாள் பானு. இரவு அவன் வீட்டுக்குத் திரும்பும்போது மணி பத்தையும் தாண்டிவிடும்!



அன்று ரமணியைப் பற்றிப் பெரியம்மா கூறிக் கலங்கின போது, அது மாத்திரம் அவள் உடல் க்ஷீணத்திற்கு காரணமில்லை, ஜெய்கரும்தான், என்று புரிந்தபோது அவள் மனம் வருந்தியது.

அந்த ஆல்பத்தில் விஜி அழகாகத்தான் இருந்தாள். இவளிடம் என்ன குறை கண்டான் ரமணி. அதுவும் அவளையும் பெற்றவர்களையும் விட்டுவிட்டு, மற்றொரு துணையை நாடும் அளவுக்கு...

''விஜி முன்பெல்லாம் இங்கு மாதத்துக்கு ஒரு முறையாவது ஒருவித, நப்பாசையுடன், நம்பிக்கையுடன் என்னைக் காண வருவாள். இப்போது ஆறுமாதமாக அதுவும் நின்று விட்டது!''

'அதுதான் பெரியப்பா இப்படி மனம் நொந்து விட்டேற்றியாக இருக்கிறாரா?'

திருமாங்கல்ய சரடு எப்பொழுதும் மஞ்சளாகவே இருக்க: அரப்புத்தூள் (அ இலுப்பைத்தூள் கொஞ்சம் எடுத்துக் கொண்டு சரடை நன்றாகப் பிசுக்குப் போகத் தேய்த்து அலம்பி, கையில் மஞ்சள் பொடி சிறிதளவு எடுத்துக் கொண்டு, ஒரு விரலால் விளக்கெண்ணெயைத் தொட்டு, மஞ்சள் பொடியில் போட்டு நன்றாகப் பிசிறி, சரடில் வைத்து தேய்க்க வேண்டும். சரடு மஞ்சளாக ஆகிவிடும்.

அதிக அளவிலும் மஞ்சள் பொடியில் சிறிதளவு விளக்கெண்ணெய் கலந்து பிசிறி பாட்டிலில் அள்ளி வைத்துக் கொள்ளலாம். உடம்பிலும், சரடிலும் மஞ்சள் மிக நன்றாகப் பற்றும்.

கமலா.

கைப்பைக்குள் அந்த முகவரி பத்திரமாக இருந்தது. விஜியின் வீட்டைக் கண்டுபிடிப்பதில் பானு அவ்வளவாகப் பிரயாசைப் படவில்லை. முன்னறையிலேயே 'பளிச்' சென்று கண்ணில் பட்டாள் விஜி. மங்கிய மாலை வெளிச்சத்தில் தெரியும் நிலா போல் ஒளி குன்றிய அவள் தோற்றம் மனதைச் சஞ்சலப்படுத்த தன்னை அறிமுகப்படுத்திக் கொண்டாள் பானு.

நல்லவேளை வீட்டில் யாருமில்லை.

எல்லோரையும் போல இன்பக் கனவுகளுடன் தான் தன் வாழ்க்கையைத் தொடங்கினாள் விஜி.

ஆயினும் இந்த நெருக்கமான உறவில் பிணைப்பின் உறுதி இல்லை என்பதை வெகு சீக்கிரத்திலேயே புரிந்து கொண்டேன். கல்யாணத்திற்கு முன்பிருந்தே அவளுடைய உறவு அவருக்கு இருந்திருக்கிறது. பெற்றவர்கள் அறிந்திருக்கவில்லை. பஸ் ஸ்டாப் நட்பு, வாழ்க்கைப் பயணத் துணையாக முடிந்து விட்டிருக்கிறது. எவ்வளவோ எதிர்பார்ப்புக்கள், நம்பிக்கைகள்... இன்று இவை எனக்குத் துணையாக இல்லை...''

உடைந்த குரலில் விஜி குமுறிய போது, பானு அன்புடன் அவளைத் தேற்றினாள்.

''பெண்களுக்கு வாழ்க்கையில், எதிர்பார்ப்புக்கள், நம்பிக்கைகள் அவசியம். அவர்களது பாசப் பிணைப்புக்களே எதிர்கால உலகின் அச்சாணி வேர்.'' 'ஒருவேளை ரமணி நடந்ததை மறந்து, அவளை நோக்கித் திரும்பினால்...'

''....நான் இருகரம் நீட்டி வரவேற்பேன். அதில் சந்தேகமேயில்லை...''

பெரியம்மா சொற்படி ரமணியின் அலுவலக முகவரிக்குக் கடிதம் எழுதிக் கொண்டிருந்தாள் பானு.

''அம்மா...'' ஜெய்கர் 'பாண்ட் பாக்கெட்'டில் கைவிட்டபடியே உள்ளே வந்தான். ''கொஞ்சம் பணம் கொடு...''

பெரியம்மா சற்றும் எதிர்பாராமல், தலையணை அடியில் கீதைப் புத்தகத்திலிருந்து கத்தை நோட்டுக்களை எடுத்துக் கொடுத்தாள் பானு. புருவத்தை உயர்த்திய ஜெய்கரை நோக்கி இயல்புடன் சிரித்தாள் அவள்.

''என்ன பார்க்கிறாய்! உன்னுடையது தான். நேற்று 'ப்ரிட்ஜ்'விருந்து விஸ்கிக்குக் கலக்க சோடா வேண்டுமென்று ராத்திரி அலறினாயே... செல்லம்மா மாமிக்கு பதிலாக நான்தான் கொண்டு வந்தேன். அப்போ டேபிளிலும், அடியிலும் இதெல்லாம் இறைந்து கிடந்தது. பொறுக்கி எடுத்து வைத்தேன். கேட்கும்பொழுது கொடுக்கலாமென்று...''

அவன் முறைத்தான். 'பட்'டென்று பணத்தைப் பிடுங்கிப் பாக்கெட்டினுள் திணித்தவன் ''அவரவர் அவரவர் காரியத்தோடு நிற்பது நல்லது...'' என்று பொதுவில் இரைந்து விட்டுச் சென்றான்.

பானு ஒரு நிமிடம் புன்னகைத்து விட்டு கடிதத்தை விட்ட இடத்திலிருந்து தொடர்ந்தாள்.

அவளுக்கு அன்றிரவு உறக்கம் வரவில்லை. அப்பாவும் அம்மாவும் வாழ்ந்த வாழ்க்கை தெய்வீகமானது என்று தோன்றியது. வாழ்க்கையை அந்தக் கோணத்திலிருந்தே பார்த்துப் பழகிய அவளுக்கு இந்த வீட்டின் புதிய படிகள் திகைப்பையும் எதிர்காலத்தைப் பற்றிய ஒரு அச்சத்தையும் தோற்றுவித்தது. ஆனால் அப்பா சூக்ஷ்மமாக, ''பயமா..

நீங்கள்...
தரமான பொருளைப் பெற அதிகமாக
செலவு செய்கிறீர்களா?
அல்லது மட்டமான பொருளே போதும்
என்று இருந்து விடுகிறீர்களா?

# பிஜ் கொண்டு அதை மதிப்பிடுங்கள்

**விலையிலே**

பிஜ், சிறந்த முறையில் சிக்கனம் மற்றும் தரம் இரண்டையும் பிணைக்கிறது. உண்மையில், பிஜ் அளிக்கும் சிக்கனம் இருதரப்பட்டது. இதோ கண்டுகொள்வீர்—இதர நன்கறிந்த துலக்கும் பவுடர்களைவிட பிஜ் 25% குறைந்தவிலை கொண்டது. அத்துடன், மட்டமான துலக்கும் பவுடர்களைவிடக் குறைந்த அளவே பிஜ் போதும் மாசற்ற பளபளப்பு வீசுவதற்கு.




**செயல்திறனிலே**

எவர்சில்வர் பாத்திரங்கள், கண்ணாடிப் பாண்டங்கள், வாஷ் பேஸின்கள், எவற்றிலிருந்தும் சூப்பர் பிஜ், கறைகள், கசடு, பிசுக்கு இவற்றை தீவிரச் செயல் புரிந்து நீக்கி விடுகிறது. விரைவில் நுரைவளம் பெருகும் திறனால் நாசுக்கான பாகங்களையும் சொரசொரப்பான பாகங்களையும் மேன்மையாகவும், எளிதாகவும் சுத்தம் செய்கிறது. பல-வித உபயோக பிஜ் இருக்கையிலே வெவ்வேறு துலக்கும் தேவைகளுக்கு விலை அதிகம் கொடுத்து வெவ்வேறு பவுடர்கள் வாங்குவானேன்? உயர்ந்த சேமிப்பு மற்றும் உயர்ந்த செயல்திறன்— இவை சரியான அளவில் இணைந்த பிஜ் வாங்குவீர்.

கோத்ரெஜ் தயாரிப்பு

## விலையோ குறைவு, தரமோ உயர்வு

CASGS-163-183TM

# வாலிபரான உங்களின் உரிமை



## குறைந்த விலைக்கு ஆயுள் இன்ஷ்யூரன்ஸ் வாங்குவது

விரைவில் உங்களை நம்பிச் சார்ந்திருப்பவர் ஏற்படுவர்-நீங்கள் திருமணம் செய்து கொள்வீர்கள், மக்கள் செல்வம் பெருகும். அவர்களின் பாதுகாப்பிற் காக நீங்கள் ஒரு ஆயுள் இன்ஷ்யூரன்ஸ் பாலிசி எடுக்க வேண்டியிருக்கும். அதைச் சீக்கிரம் செய்யுங்கள். பணத்தைக் குறைத்துக் கட்டுங்கள். (வயது குறைந்தவர்களுக்கு பிரீமியங்கள் குறைவு).

நீங்கள் ஆரோக்கியமாக இருக்கும் இன்றுதான் இன்ஷ்யூர் செய்துகொள்ள சரியான தருணம். ஆரோக்கியமின்மையுடனே, முதிர்ந்த வயதிலோ இன்ஷ்யூர் செய்து கொண்டால் கூடுதலான பிரீமியங்கள் கட்டவேண்டி வரும். உங்களுடைய எல்ஐஸி முகவர் ஆயுள் இன்ஷ்யூரன்ஸ் பாலிசி பற்றியும், தனியார் சேமிப்புத் திட்டங்கள், முதலீடு திட்டங்களைவிட ஆயுள் இன்ஷ்யூரன்ஸில் உள்ள மேம்பாடுகளைப் பற்றியும் விளக்குவார்.

பலவித ஆயுள் இன்ஷ்யூரன்ஸ் திட்டங்கள் உங்கள் தேவைகளுக்கு ஏற்றவாறு உள்ளன — மாற்றக் கூடிய முழு ஆயுள் பாலிசித் திட்டம், என்டோமெண்ட் பாலிசித் திட்டம், முழு ஆயுள் திட்டம் போன்றவை. எல்ஐஸி முகவர் சரியான திட்டத்தை நீங்கள் தேர்ந்தெடுக்க உங்களுக்கு உதவுவார். இன்றே அவரைக் கலந்து ஆலோசியுங்கள் அல்லது அருகிலுள்ள எல்ஐஸி அலுவலகத்தை விவரங்களுக்கு அணுகுங்கள்.

Radeus/LIC/13-83 TAM

நாளைய வளரும் தேவைகளுக்கு இன்றே இன்ஷ்யூர் செய்யுங்கள்.

**ஆயுள் இன்ஷ்யூரன்ஸ் கார்ப்பரேஷன் ஆப் இந்தியா**



எதற்கு... உனக்கா... எப்படி...'' என்று கேட்பது போல் தோன்றியது.

செல்லம்மா மாமி பானுவிடம் உயிராய் இருந்தாள். பெரியம்மாவுக்கோ அவள் வாக்கு தேவ வாக்காக இருந்தது. பெரியப்பாவும் ஓரளவு குடும்பத்தில் பற்று வைக்கலானார். அவள் முயற்சியில் பொதுவாக பெரியப்பா, பெரியம்மாவினிடையில் ஓரளவு அன்னியோன்னிய பாவம் கூடத் தோன்றியிருந்தது.

அன்று மாலை காப்பி, டிபன் முடிந்த கையுடன் பெரியப்பா வாக்கிங் சென்றபோது, அந்த 'போன்' வந்தது.

ரமணி!

## 4

"இப்படி ஒரு தங்கை எனக்கிருப்பதாக அம்மாவோ அப்பாவோ சொன்னதில்லையே!'' நெய் ஒழுகும் கேசரியை ருசி பார்த்தவண்ணம் கேட்டான் ரமணி, ''அம்மா படுத்த படுக்கையாய் இருக்கிறாள்' என்று எழுதியிருந்தாயே!''

''உண்மைதான்...'' என்றாள் பானு.

''ஒன்றிரண்டா கவலைகள்... உடம்பும் ரொம்ப தளர்ந்து விட்டது. உன்னைப் பார்க்க வேண்டும் என்று ரொம்ப ஆசைப்பட்டாள். சாப்பிடும்போதெல்லாம் உன் ஞாபகம் வந்து விடுகிறது...''

மறந்து கூட, விஜியைப் பற்றிய விஷயத்தை, எடுக்கவில்லை பானு. அவனுடைய சொந்த வாழ்க்கையைப் பற்றியும் கேட்கவில்லை. அரைமணி போல் இருந்த அவனிடம் அம்மாவைப் பற்றி, அப்பாவைப் பற்றி, ஜெய்சரின் தான்தோன்றித்தனத்தைப் பற்றி மாத்திரம் பேசினாள். பேச்சுவாக்கில் அவன் பொருட்படுத்தாத வகையில் வீட்டு முகவரியையும் வாங்கி வைத்துக்கொண்டாள்.

இரண்டு நாட்கள் சென்று விட்டன. அன்று ஞாயிற்றுக்கிழமை. பெரியம்மாவிடம் பொதுவாக வெளியே போய்விட்டு சீக்கிரம் வந்து விடுவதாகச் சொல்லிவிட்டு ரமணியின் வீட்டை நோக்கி நடந்தாள் பானு. அவனுக்குப் பிடிக்குமே என்று டிபன் பாக்ஸில் யாருமறியாமல். வெங்காய சாம்பாரும் உருளைக் கிழங்கு கறியும் இடம்பெற்றிருந்தன.

எங்கோ தொலை தூரத்தில் பவானி நகர். பஸ் வசதி இருந்ததாலும், இளம் வெய்யிலாக இருந்ததாலும் பானுவுக்கு அவ்வளவாக சிரமம் இருக்கவில்லை.

சந்தடியின்றி உள்ளடங்கிய வீடு. 'காலிங் பெல்லை' ஒருவித தயக்கத்துடன் அழுத்தினாள் அவள். தடதடவென்ற காலடி ஓசையுடன் கதவைத் திறந்த ரமணி அவளைச் சற்றும் எதிர்பார்க்காமல் பிரமித்து நின்றான்.

அவன் சங்கடத்தைப் புரிந்து கொண்டவளாக, ''என்ன! வீடு தேடி வந்திருப்பவளை வாவென்று கூடக் கூப்பிடாமல்... ம்...'' தானாகவே நாற்காலியில் அமர்ந்தாள் அவள்.

''ஓ... ஸாரி... உன்னைச் சற்றும் எதிர்பார்க்கவில்லை... அதுதான்... இரு... ஒரு நிமிடம்... அடுப்பை நிறுத்திவிட்டு வந்து விடுகிறேன்.''

ஏதோ தீய்ந்த வாசனை வந்து கொண்டிருந்தது. எண்ணெயும் மஞ்சட்பொடியுமாக பிசுக்கு ஏறியிருந்த வேஷ்டியை மாற்றிக் கொண்டு அவள் எதிரில் அமர்ந்து கொண்டான் ரமணி.

''சுயம்பாகமா...''

''ம்...'' இன்னும் ரமணிக்கு அவள் வந்த அதிர்ச்சி தீரவில்லை என்று தோன்றியது.

''உனக்குப் பிடிக்குமே என்று கொண்டு வந்தேன்.'' டிபன் பாக்ஸை எடுத்தாள். சாம்பாரின் மணம் மூக்கைத் தூக்கியது.

---

சீதபேதியால் அவதிப்பட்டால், சிறிதளவு கறிவேப்பிலையை அம்மியில் வைத்து நன்றாக அரைத்துக் கொள்ளுங்கள். நெல்லிக்காய் அளவு உருட்டி உருண்டை செய்துகொண்டு, ஒரு டம்ளர் தயிரில் ஓர் உருண்டையைப் போட்டுக் கரைத்துக் கொண்டு காலையில் வெறும் வயிற்றில் ஒரு டம்ளர் தயிர் சாப்பிட்டால் சீதபேதி குணமாகும். அடுத்தநாளும் இருந்தால் இதேபோல் சாப்பிட முழுவதும் குணமாகும்.

—கே. பி. பரமேஸ்வரி.

---

''சாதம் மாத்திரம் நானே வைத்துவிடுகிறேனே...''

''வேண்டாம், வேண்டாம்...'' அவசரமாக மறுத்தான் ரமணி.

''காலையிலேயே சாதம் வைத்துவிட்டேன். இப்பொழுது தான் அப்பளம் பொரிக்கலாம் என்று போனேன்.'' ஏனோ அவன் முகத்தில் அசடு வழிவதாக இப்போது அவளுக்குத் தோன்றியது.

மணி ஒன்பதரை அடித்தது.

''நானும் இன்னும் சாப்பிடவில்லை...''

டேபிளில் கேரியரை வைத்தாள். பெண்ணின் கைபட்டுப் பல நாட்கள் ஆகிவிட்டன என்று பறைசாற்றியது வீடு. ரமணியை டேபிளில் அமர்த்திவிட்டு, தானே குக்கரைத் திறந்து சாதத்தை எடுத்து வந்தாள்.

இருவருமாகப் பொது விஷயங்களைப்பேசிக் கொண்டு சாப்பிட்டனர். என்ன, ஏது என்று ரமணிக்குப் புரிவதற்குள்ளேயே அடுக்களையைச் சீராக்கி, பாத்திரங்களைத் தேய்த்து, அழுக்கு உடைகளைப் பக்கெட்டில் நனைத்து, அந்த நான்கு அறை வீட்டை இருத்தமாக வைத்து, புன்னகையுடன் 'ஃபானின்' கீழ் அமர்ந்தாள்.

''அப்புறம்...''

''குழந்தைகள் இருக்குமென்று வந்தேன்.''

அவன் மௌனமாக 'ஃபானின்' சுழற்சி யிடையே சிறிதுநேரம் பார்த்துக் கொண் டிருந்துவிட்டு மெதுவாகச் சொன்னான்.

''குழந்தை இறந்தே பிறந்தது. ஆறு மாதம் ஆகிவிட்டது...''

''பாவம்... அப்போ... அவள்... உன்... உன்...'' மனைவி என்ற சொல்லை உபயோ கிக்கத் தயங்குவது புரிந்தது.

''சின்னத் தகராறுதான். பெரிதாக வளர்ந்து விட்டது.''

இவளிடம் சொல்லலாமா வேண்டாமா என்று தயங்குவது புரிந்தது. ஆனால் பானு வின் தைரியமான முகம் அவனுக்கு பலநாள் நெருக்கத்தை ஏற்படுத்தியது.

**இரவில் மூச்சடைப்பு இருந் தால் மூக்கு ஓரங்களில் வேப் பெண்ணெய் தடவிக் கொண் டால் தொந்தரவு இராது.**

**-திருமதி. சந்தானம்**

''ரொம்ப செலவழிக்கக்கூடாதே என்பேன். அவள் சம்பளம் பூராவும், பிறந்த வீட்டுக்கு அனுப்பி விடுவாள். என் ஒருவன் சம்பளத் தில் மிச்சமீதி இல்லாமல்... மாதக்கடைசி அனேகமாகப் பத்தாம் தேதியே வந்து விடும்... இந்த 'பாஸ்-புக்'' பார்த் தாயா...'' அவன் அலமாரியிலிருந்து எடுத்துக் காண்பித்தான். ''ஓவர்...டிராப்ட் எவ்வளவு... ஒருநாள் காரமாகச் சொன் னேன். இனி வரமாட்டேன் என்று கோபித்துக் கொண்டு போய்விட்டாள்.''

''அன்பு, கொடியாய் நம்மைச் சுற்றி வளைக்கக் காத்திருக்கும் போது, நாம் தொடு வானத்தில் அதைத் தேடுகிறோம் ரமணி...'' அவள் சுற்றி வளைக்காமல் பேசியது அவ னுக்குப் புரிந்தது.

''இனி, அதை அந்தக் கோணத்திலிருந்து எதிர்பார்ப்பதில் அர்த்தமில்லை பானு...''

''ஏன் இல்லை? அதுதான் உன் அர்த்தம் நிரம்பிய வாழ்க்கை...''என்றவள்,''ஃபோன் இருக்கிறதா வீட்டில்...'' என்று கைப்பை யில் நம்பரைத் தேடினாள்.

''விஜி...'' அவள் சன்னக் குரலில் அழைத்தாள். ''அன்று சொன்னாயே! நினை விருக்கிறதா? இன்று வரவேற்க வா இங்கே.''

ரமணி 'நெர்வஸாக' இருப்பது வெளிப் படையாகத் தெரிந்தது.

பத்தே நிமிடங்களில் வாசலில் ஆட்டோ நின்றது. விஜி வெண்மையான தேவதையாய் படியேறி வருவதும் தெரிந்தது.

''டிபன் கேரியருக்கு அவசியமும் அவசரமு மில்லை. நாளை ஸ்வீட்டோடு வாருங்கள்...'' பானு சந்தோஷத்துடன் விடை பெற்றாள்.

## 5

லேசாக மழை தூறிக் கொண்டிருந் தது. ரமணி வீட்டிலிருந்து பஸ் ஸ்டாண்ட் கொஞ்ச தூரம்தான். குடை வேறு இல் லையே என்று நினைத்துக் கொண்டே வேக மாக நடந்தாள் பானு. பஸ் வரும் அறி குறியே இல்லை.

மெயின் ரோடுக்குப் போய் விட்டால் ஆட்டோ கிடைக்கலாம் என்ற நம்பிக்கை யில் வேகமாக நடந்தாள். மெயின்ரோடை அடைவதற்குள் மழை வலுத்தது. ஒதுங்க இடம் தேடியவள் அந்தச் சிறிய வீட்டின் வாசற்படியில் சற்று ஒதுங்கினாள். நல்ல வேளை அதிகம் நனையவில்லை.

வீட்டினுள் ஓட்டமும், பாட்டமும், சந் தடிகளும், இடையிடையே ஒரு பெண்மணி யின் கூக்குரலுமாக மழையின் சப்தத்தை யும் மீறி ஒலித்தது. பாதிதிறந்திருந்த ஜன்னலில் பார்வை ஓடியது.

பணக்காரத்தனம் அநாகரீகமாக காட்சி அளித்தது. மூலைக்கு மூலை இழுக்கப்பட்டி ருந்த சோபா செட்டுகள், ஒட்டடைபடிந்த சரவிளக்குகள்... இன்னும் இறைந்து கிடந்த பேப்பர் புத்தகங்கள்!

''சனியன்களா! படித்துப் படித்து சொல் கிறேன்... கேட்டால்தானே. ஒருத்தியாக எத்தனை காரியம் செய்ய முடியும்?...'' கோபக் குரலில் ஒரு பெண்மணி. கூவி தடாலென்று கதவைத் திறந்தாள்.

பானு லாகவமாக ஒதுங்கியிராவிட்டால் அவள்மேல் அந்தக் குப்பை கூளங்கள் அபி ஷேகம் ஆகியிருக்கும்!

அந்தப் பெண்மணி லேசான லஜ்ஜை யுடன். ''ஏதோ தெரியாமல்... இப்படி உள்ளே வாருங்கள்... மழை சற்று நிற்கட் டும் போகலாம்...'' என்று அழைக்கவே, சாரலும் வலுத்ததால் அவள் அழைப்பை ஏற்று முன் அறைக்குள் நுழைந்தாள் பானு.

தலையைச் சாய்த்துக் கொண்டு இரு பெண் குழந்தைகள்!

முன் அறையில் காலை வைக்கவே பிடிக்க வில்லை. ஒரு உந்துதலில் கீழே கிடந்த பேப் பர்களைப் பொறுக்கி டீப்பாயை நடுவில் நகர்த்தி அதன் மேல் வைத்துவிட்டு, நிமிர்ந்தவள், சுவரில் மாட்டப்பட்டிருந்த அந்தப் போட்டோவைக் கண்டு ஆச்சரியத் துடன் வாயைப் பிளந்தாள். இந்த வீடு இப்படி அலங்கோலமாய் இருப்பதில் ஒன்றும் ஆச்சரியமில்லை என்று தோன்றியது.

''லீவு நாளென்றால் இவர்களை என்னால் 'மானேஜ்' பண்ணவே முடிவதில்லை... உடம்பும் ரொம்ப தளர்ந்து போகிறது... டீ சாப்பிடுங்கள்... மழைக்கு இதமாக இருக்கும்...''

அதைக் கொஞ்சம் தயக்கத்துடனேயே நோட்டமிட்டு விட்டுப் பருகினாள் பானு.

வயதில் சற்று பெரியவளாகத் தோன்றின பெண்ணை அருகில் அமர்த்தி மெதுவாகப் பேச்சுக் கொடுத்தாள். பேச்சுவாக்கிலேயே பிரிந்து கிடந்த பின்னலை 'ரப்பர் பேண்ட்' போட்டு அழுத்திக் கட்டிவிட்டாள்.

''எந்த 'க்ளாஸ்' படிக்கிறாய்?''

''ஏழாவது முடிந்து எட்டாவது போகப் போகிறேன்.''

''இவ்வளவு பெரியவள் வீட்டில் இருக்கும் போது வீடு இப்படி இருந்தால் 'ஷேம்' இல்லையா... எங்கே! இந்த சோபாவைப் பிடி...''

அந்தக் குழந்தை வெட்கம் சூழ்ந்த உற்சாகத்துடன் சோபாவைப் பிடிக்க முன் அறை சில நிமிஷங்களிலேயே கச்சிதமாகியது.

''அம்மா! இங்கே சீக்கிரம் வந்து பாரேன்...'' பெண்கள் போட்ட கூச்சலில் அந்தப் பெண்மணி உள்ளிருந்து ஓடோடி வந்தாள். மூக்கில் விரலை வைத்தாள்.

''யார் பெற்ற பெண்ணோ... முன்பின் அறிமுகமில்லை... இப்படிப் பழகுகிறாயே... மழை ஊருக்கு மாத்திரம் நன்மை செய்யவில்லை... எனக்கும்தான்... உன் வீடு எங்கேம்மா...''

அதற்கு பதில் சொல்லாத பானு. ''மழை குறைந்து விட்டது... வீட்டில் தேடுவார்கள்... நான் பிறகு வருகிறேன்...'' என்றவாறு புன்னகையுடன் படியிறங்கினாள். ஏதோ ஒரு தாபத்துடன் அந்த வீட்டினர் அவள் போவதையே பார்த்து நின்றனர்.

பானுவுக்கு வீடு செல்லும் வரை அந்தப் புகைப்படமும், அந்த வீடு இருந்த நிலையுமே மனத்தில் சூழ்ந்திருந்தன.

பெரியம்மா சாப்பாடு முடிந்து, பெரியப்பாவின் மடியில் அயர்ந்து தூங்குவதுகண்டு, ஓசைப்படாமல் தன் அறைக்குள் சென்று உடைகளை மாற்றிக் கொண்டாள் பானு.

ஜெய்கரின் அறையில் விடுமுறை நாள் கொண்டாட்டம். ஜெய்கரும் அவன் தோழன் வினோத்தும் ஸ்டீரியோவுக்கும் மேலே கூக்குரலிட்டுப் பாடிக் கொண்டிருந்தனர்.

முன் அறையில் பெரியம்மா உறக்கம் கலைந்து எழுந்து விட்டிருந்தது தெரிந்தது.

காப்பி மாத்திரம் இன்றி, வாயில் கரையும் மைசூர் பாகுடன் உள்ளே நுழைந்தவள் பெரியப்பாவிடம் ஒன்று கொடுத்து விட்டு, பெரியம்மாவின் வாயிலும் ஒன்று போட்டாள்.

''காரணமில்லாமலா...ரமணியும் விஜியும் நாளை வருவதாகச் சொன்னார்கள்...''

''நாளை வரை காத்திருப்பானேன் என்று இன்றே வந்து விட்டோம்...''

கைநிறையப் பழங்களுடன் வாயிற்படி அருகில் விஜி பெருமை பொங்க நிற்க அருகில் ரமணி.

உற்சாகத்திற்குக் குறைவில்லை...

ஆனால் ஜெய்கர்...

## 6

இரவு பதினொன்றாகி விட்டது. காம்போஸ் சாப்பிட்டதால் பெரியம்மா நிர்ச்சிந்தையாய் உறங்கி விட்டாள். ஆபீஸ் ரூமில் பெரியப்பாவின் லேசான குறட்டை ஒலி கேட்டது. இன்னும் ஜெய்கரின் அறையில் பளீரென்று ஒளி.

செல்லம்மா மாமி படுக்கப் போய் விட்டாள். உறக்கம் வராமல் புரண்ட பானு, இன்னும் வாயில் தாழ்ப்பாள் போடவில்லையே என்ற நினைவுடன், முன் அறைக்கு வந்தவள் திடுக்கிட்டாள் அந்தக் காட்சியைக் கண்டு.

### ஒற்றைத் தலைவலிக்கு

குப்பை மேனிச் செடியைக் கொண்டு வந்து இடித்துச் சாறு பிழிந்து ஒரு டம்ளர் எடுத்துக் கொண்டு அதே அளவு நல்லெண்ணெய் சேர்த்து ஒரு பாத்திரத்தில் ஊற்றிக் காய்ச்ச வேண்டும். நன்றாய்க் காய்ச்சியபின் வடிகட்டி ஒரு பாட்டிலில் எடுத்து வைத்துக் கொள்ளவும். இந்த எண்ணெயை ஒரு நாள்விட்டு ஒருநாள் தலைக்குத் தேய்த்து ஸ்நானம் செய்து வந்தால் ஒற்றைத் தலைவலி நீங்கிவிடும்.

—எஸ். விஜயா சீனிவாசன்.

மாடிப்படியின் கடைசிப் படிகளில் பாதியாய்ச் சுருண்டு விழுந்திருந்தான் வினோத். வாந்தி எடுத்திருக்க வேண்டும். 'குப்' என்ற நாற்றம் வயிற்றைப் புரட்டியது. குடிமயக்கமா... அல்லது...

ஓசைப்படாமல் பின் அறைக்குச் சென்று செல்லம்மா மாமியை எழுப்பினாள்.

''ஒன்றுமில்லை. பதட்டப்படாமல் வாருங்கள்...'' என்னவோ ஏதோவென்று நினைத்த மாமி, வினோத்தைக் கண்டு உதட்டைப் பிதுக்கினாள். ''அவரவர் வீட்டில் இதெல்லாம் வைத்துக் கொள்ளக்கூடாது.''

''உஷ்... மெதுவாகக் கால் பக்கம் பிடியுங்கள்...''

இருவருமாக அவனை சோபாவில் நீளமாகப் படுக்க வைத்தனர்.

அந்த அசிங்கத்தைக் கண்டு மாமி முகம் சுளிப்பதைக் கண்டு, தானே பக்கெட்டும் துணியும் கொண்டு வந்து அலசித்துடைத்து சுத்தப்படுத்தி டெட்டால் ஊற்றினாள்.

வினோத்தின் மேல் காற்று படும்படி மின்விசிறியைச் சுழல விட்டுவிட்டு ஜெய்கரின் அறையை அடைந்தாள்.

சீட்டும், பணமும் இறைந்து கிடந்த டேபிளைச் சீராக்கி விட்டு, கட்டிலில் கிடந்த அவனைப் போர்த்தி விட்டுவிட்டு மின்விளக்கையும் நிறுத்தி, யோசனையுடன் படியிறங்கினாள். அதே யோசனையுடன் வினோத்தையும் பார்த்து விட்டு, வாயிற்கதவை அடைத்து தன் அறைக்கு நடந்தாள்.

அப்பா இந்த மாதிரி வாழ்க்கையையெல்லாம் நினைத்துக் கூடப் பார்த்திருக்க மாட்டார்., அம்மாவுக்கும், அப்பாவுக்கும் நல்லதைத் தவிர வேறு ஒன்றுமே தெரியாது.

பெட்டியின் அடியில் அப்பா அவ்வப்போது எழுதி வைத்த குறிப்புக்கள்கொண்ட நோட்டு வைத்திருந்தது நினைவுக்கு வர சாவகாசமாக அதை ஒருநாள் படிக்க வேண்டுமென்று தோன்றியது.

காலை வழக்கம் போல் ஐந்து மணிக்கெல்லாம் எழுந்து விட்ட பானு, முன் அறைக்கு வந்தபோது, அங்கு சோபாவில் சஞ்சலமும் வெட்கமும் சூழ, வினோத் அமர்ந்திருந்தான். அவனிடம் ஏதோ பேச வந்தவனைத் தடுத்து, ''வாசலில் ஸ்கூட்டர் ஜாக்கிரதையாக இருக்கிறது. முதலில் வீட்டுக்குப் போங்கள். அவர்கள் கவலையுடன் காத்திருப்பார்கள்'', என்று கதவைத் திறந்தாள்.

வினோத் அழுத்தமான ஓசையுடன் ஸ்கூட்டரைக் கிளப்புவது கேட்டது.

அன்று எல்லோருக்கும் காலையில் ரமணியின் வீட்டில் சாப்பாடு. ஜெய்கர் நேரமில்லை என்று முன்பே அலுவலகம் சென்று விட்டான். காரில் பெரியம்மாவும், பெரியப்பாவும்பெருமிதத்துடன்பானுவுடன்அமர, அன்றைய பொழுது சந்தோஷமாக நீண்டது. விஜி மிகவும் வற்புறுத்தவே, பானு பிற்பகலில் திரும்புவதாகக் கூறி அங்கேயே தங்கி விட்டாள்.

வீடு திரும்பும்போது, விஜி, ''இங்கே பஸ் கிடைப்பது கஷ்டம். மெயின் ரோடுபக்கம் போனால் வசதியாகப் போகலாம்...'' என்று கூறவே பானு கை அசைத்துவிட்டு நடந்தாள்.

அன்று மழையில் இதேபோல் நடந்தது நினைவுக்கு வர, யதேச்சையாய் தூரத்தில் தெரிந்த அந்த வீடு 'பளிச்' சென்றுபட்டது. கொஞ்சம் படபடப்பும் இருந்தது.

அவள் எதிர்பார்த்தது போலவே, வீட்டின் வாயிலில் காய்கறி வாங்கிக் கொண்டிருந்த அந்தப் பெண்மணி, பானுவைக்கண்டதும், வாஞ்சையுடனும், அதிசயத்துடனும் புன்னகைத்தாள்.

''நான் பார்த்திருக்காவிட்டால் இப்படியே போயிருப்பாய்... உள்ளே வா...''

அன்பை ஏற்கவும் மனமில்லை, மறுப்பதும் கடினமாக இருந்தது.

மெதுவாக உள்ளே நுழைந்தாள் பானு. கண்கள் வியப்பில் விரிந்தன. முன் அறை கிளி கொஞ்சிற்று. ஜன்னல்களில் புதிய திரைச் சீலைகள்... நட்ட நடுவில் சோபா. அலமாரியில் அழகாக அடுக்கி வைக்கப்பட்ட புத்தகங்கள்...

''அதையேன் கேட்கிறாய்! அன்று நீ வந்து விட்டுப் போனது முதல், குழந்தைகளுக்கு உன் ஸ்மரணைதான். பெரிய பெண் தானாகவே இதெல்லாம் செய்தாள். உன்னை மீண்டும் இவ்வளவு சீக்கிரத்தில் பார்ப்பேன் என்று நினைக்கவேயில்லை... இப்படி உட்கார்...''

உண்மையிலேயே இது புதிய மாற்றம் என்று தோன்றியது பானுவுக்கு. எல்லா அறைகளுமே பார்க்கும்படியாக இருந்தன.

## நெல்லிக்காய் அவதாரங்கள்

நெல்லிக்காய் மஹாத்மியங்கள் எல்லோரும் அறிந்ததே. ஒரு நெல்லிக்காய் — 2 ஆப்பிளுக்குச் சமம் — வைட்டமின் 'சி' நிறைய உள்ளது. 'ச்யவனப்ராசனலேகியம்' மஹிமை அறியாதவர்களே கிடையாது.

நெல்லிக்காய் சீசனில் ஒன்றிரண்டு கிலோ வாங்கித் துருவிக் கொள்ளவும் — அத்துடன் உப்பை நன்றாகப் பிசிறி வெய்யிலில் காய வைத்துப் பாட்டிலில் போட்டு வைத்துக் கொள்ளுங்கள்.

1. புளியின் இடத்தில் எல்லாம் இந்தத் துருவலை உபயோகிக்கலாம். உதாரணத்திற்கு: பச்சடி, சட்னி, துவையல், ரசம், சாம்பார் எல்லாமே செய்துதான் பாருங்களேன்.
2. வைட்டமின் 'சி' மாத்திரை விழுங்குவதற்குப் பதில் இந்த ரூபத்தில் சாப்பிடுங்கள்.
3. வயிற்றுப் புரட்டல், வாந்தி வரும் நேரத்தில் இதைச் சிறிது எடுத்து வாயில் போட்டால் குணம் ஏற்படும்.
4. துருவலில் உப்பு இல்லாமல் காய வைத்துக் கொண்டால் தலைநரைக்கு சிறந்த ''டை'' (Dye) ஆகும். முதல்நாள் இரவே சிறிது துருவல் எடுத்து தண்ணீரில் ஊற வைத்துக் கொள்ளவும் — அடுத்த நாள் காலை அம்மியில் விழுதாக அரைக்கவும். இரும்பு வாணலி அல்லது தோசைக்கல்லில் இந்த விழுதைக் கிளறி எடுக்கவும். கறுத்த பேஸ்ட் போல் இருக்கும். (தார் கலரில்) இதைத் தலையில் தடவி, சிறிது ஊறி ஸ்நானம் செய்யவும். இளநரை சீக்கிரமே குணம் ஏற்படும்.

—விசாலம்.

"அன்றைக்கு உன் பெயரைக் கூடக் கேட்கவில்லை. அவசரமாகப் போய் விட்டாய். எங்கே வீடு... அப்பா என்ன செய்கிறார்...?"

பானுவுக்குக் கொஞ்சம் தயக்கமாக இருந்தது. மீண்டும் சுவற்றில் தொங்கிய போட்டோவைப் பார்த்தாள்.

"இங்கு என் பெரியப்பா வீட்டில் தற்போது இருக்கிறேன். இப்பொழுது நேரமானால் அவர்கள் தேடுவார்கள். நான் மற்றொரு முறை அவர்களிடம் தெரிவித்து விட்டு வருகிறேன்."

நிறைவுடன் சிரித்து அவசரமாக விடைப் பெற்றாள்.

தெருவில் இறங்கி நடக்கும்போதுகொஞ்சம் வேகம் கூடியது. தூரத்தே பஸ் வருவது தெரிந்தது. அப்போதுதான் நினைவு வந்தது. கையில் கைப்பை இல்லை. 'எங்கே மறந்தோம்! விஜி வீட்டிலேயா அல்லது அந்த வீட்டிலா...?"

இனி திரும்பவோ, போய்ப் பார்க்கவோ, நேரமுமில்லை. மனமுமில்லை. ஒரு ஆட்டோவை கைஅமர்த்தி நிறுத்தி ஏறிக்கொண்டாள்.

அன்று மாலை ரமணி அலுவலகத்திலிருந்து நேராக அம்மாவைப் பார்க்க வந்துவிட்டான். அவன் அழைப்பின் பேரில் பெரியம்மா அவனுடன் அவன் வீட்டுக்குக் கிளம்பினாள். நினைவாக பானு, விஜிக்கு அன்றைய டிபனை டப்பாவில் போட்டுக் கொடுத்தாள். பெரியப்பா வருவதற்கு நேரமாகும் என்று 'போன்' செய்துவிட்டார்.

பானு பொழுது போகாமல் முன் அறையில் அமர்ந்துக் கொண்டாள். வெகு நாட்களுக்குப் பின் கிடைத்த தனிமை இது. ரொம்ப நாட்களுக்குப் பிறகு தன்னை ஒரு முறை அலசிப் பார்த்து நிதானித்துக் கொள்ளக் கிடைத்த தனிமை.

பஸ்ஸரின் ஒலி கேட்டு நிமிர்ந்து, கதவைத் திறந்தாள். வினோத்! அவன் கையில் அவள் கைப்பை இருந்தது. மெதுவாக அதை அவளிடம் நீட்டினான் அவன்.

பானுவின் முகத்திலிருந்து அவனால் ஒன்றும் கண்டுபிடிக்க முடியவில்லை. அவள் இதை எதிர்பார்க்காவிட்டாலும், மௌனமாக அவனிடமிருந்து பெற்றுக் கொண்டவள், மேல் அறையைச் சுட்டிக் காட்டினாள். "ஜெய்கர் வரும் நேரம்தான்..."

"இல்லையில்லை... நான்... மற்றொரு சமயம் வருகிறேன்..."

அவன் பதட்டத்துடன் அவசரமாக வெளியேறியது அவளுக்கு வியப்பை அளித்தது.

அவன் போன சற்று நேரத்திற்கெல்லாம் ஜெய்கர் வந்தான்.

"காப்பி, டிபன்..."

'கை, கால்கள் கூட கழுவிக் கொள்ளாமல்... அதற்குள் அவசரம்... இவனுக்கு என்று ஒருத்தி வரும் வரை..."

பானு சிரிப்பு மாறாமல் ஸாஸரில் டிபனை எடுத்து வந்து அவன் முன் வைத்தாள். அவசரமாக விழுங்கிய அவன் 'பிரிட்ஜை'த் திறந்து இரண்டு பாட்டில் சோடாவுடன் தன் அறைக்குத் தாவி ஏறினான். வினோத் வந்ததையும், சென்றதையும் அவனிடம் கூறவில்லை பானு.

பெரியம்மா அன்றிரவு ரமணி வீட்டிலேயேத் தங்கி விடுவதாகப் 'போன்'வந்தது

பெரியப்பா ஆபீஸிலிருந்து வரும்போது ஷர்ட்டைக் கூட அவிழ்க்காமல் சோபாவில் சாய்ந்தார்.

"ரொம்ப டயர்டாக இருக்கும்மா... காப்பி கொண்டு வா..."

பானு பதட்டத்துடன் காப்பி டம்ளருடன் விரைந்து வந்தாள்.

ஷூக்களைக் கழற்றி, ஸாக்ஸையும் கழற்றி அதன் இடத்தில் வைத்தாள்.

"என்ன செய்கிறது பெரியப்பா..."

அவர் அவள் கைத்தாங்கலில் மெதுவாக படுக்கையில் சாய்ந்தார்.

"இப்படி உட்காரும்மா! ஒன்றும் பயப்படாதே. காலையிலிருந்தே ஒன்றும் மனசு

## நெல்லிக்காய் துருவல் வைத்து கொத்தமல்லிப்பொடி

கொத்தமல்லியை நன்றாக ஈரம் போகத் துண்டில் துடைத்து பேப்பரில் காற்றாடப் போட்டு வைக்கவும். வாணலியில் சிறிது நேரம் வாட்டி எடுக்கவும். (அதைப் பொடியாக நறுக்கி) மிக்ஸியிலோ, ஆட்டுக்கல்லிலோ, இத்துடன் நெல்லிக்காய்த்துருவல், உப்புப் பொடி வைத்துப் பொடிக்கவும் — சிறிது ஓமம், மிளகு இவற்றையும் வறுத்து பொடியுடன் சேர்த்து இடித்து வைத்துக் கொள்ளலாம். அல்லது மிளகாய் வற்றல், வெல்லம் வைத்தும் இடித்துக் கொள்ளலாம். பூண்டு, உளுத்தம்பருப்பு இவைகளையும் வறுத்துப் பொடி சேர்த்துப் பொடிக்கலாம். இத்துடன் கறிவேப்பிலையையும் வறுத்துப் பொடி செய்யலாம். இதை சாதத்துடன் கலந்து சாப்பிட மிக ருசியாக இருக்கும்.

நெல்லிக்காய் துருவல் வைத்து, பச்சைக் கொத்தமல்லி தழை, உப்பு, பச்சை மிளகாய் பெருங்காயம், வெங்காயம், வெல்லம் இவை வைத்து அரைத்து சட்னி செய்து பாருங்களேன். தோசை, இட்லி, மோர்சாதம், இவற்றிற்கு படு ஜோராக இருக்கும்.

—விசாலம்

சரியில்லை. நீ வந்தது முதல் இந்த வீடே சுபிக்ஷமாயிருக்கு. ரமணியையும் விஜியையும் சேர்த்து வைத்தாயே... அதை விடப் பெரிய காரியம் என்ன? நீ உன் அப்பாவைக்கொண்டிருக்கிறாய்... மனசு இப்பல்லாம் ரொம்ப சஞ்சலப்படறது... ஜெய்கர் போகும் வழியே சரியில்லை...'' அவர் பானுவின் கைகளை அழுந்தப் பற்றிக் கொண்டார்.

''உன் பெரியம்மா... அவள் சாது... அப்புறம் நீ... உனக்கு ஒரு நல்ல வழி ஏற்படுத்தவில்லையென்றால் நன்றி கெட்டவனுவேன்..''

''இப்பொழுது இதைப்பற்றியெல்லாம் என்ன பெரியப்பா...''

''காலையில் ஆபீஸில் லேசாக நெஞ்சுவலி வந்தது பானு. அதற்குப் பிறகுதான் இத்தனை சஞ்சலங்களும்...''

பானு அமைதியாய் சிந்தித்தாள். அம்மா தன் கடைசி காலங்களில் பலவற்றை நினைத்து சஞ்சலப்படும்போது அப்பா அடிக்கடி கூறியது நினைவுக்கு வந்தது. இவ்வளவு பெரியவருக்கு தான் அதைக் கூறலாமா...

**நீர்ச்சளிக்கு சூடான காப்பி டிகாக்ஷனில் பால், சர்க்கரை சேர்க்காமல் ஒரு கரண்டி தேன் கலந்து சாப்பிட்டால் குணமாகும்.**

**-திருமதி. சந்தானம்**



ஒரு பேப்பரில் மௌனமாக எழுதி அதைப் பெரியப்பாவிடம் நீட்டினாள்.

''பல நிற விகாரங்கள் சேர்ந்தது வெண்மை. ஆனால் அதன் பரிசுத்தத்தை யாரும் ஏதும் செய்து விட முடியாது. அதேபோல வெளியுலகில் பலவித இயக்கங்கள் பாதிப்பது போல் இருந்தாலும் ஆத்மா தனித்தன்மை வாய்ந்தது. நிச்சலனமானது. நிர்விகாரமானது...''

பெரியப்பா அதை நிதானமுடன் படித்தார். உள்ளூர நூதன அமைதியும், ஆனந்தமும் பரவுவதை அவரால் உணர முடிந்தது. சந்தோஷத்துடன் பானுவைப் பார்த்துப் புன்னகைத்தார்.

''அமைதியாக உறங்குங்கள் பெரியப்பா.. கஞ்சி போட்டு வருகிறேன். அதை மாத்திரம் சாப்பிட்டு விடுங்கள். காலையில் தெம்பாக இருக்கும்...'' கழுத்துவரை இழுத்துப் போர்த்திவிட்டு நகர்ந்தாள் பானு.

ஜெய்கர் மாடி அறையில் பரிதவித்துக் கொண்டிருந்தான். ஏன் இன்னும் விநோத் வரவில்லை? இரண்டு முறை ... ...ய தும் அவன் வீட்டில் இல்லை என்ற பதில் வந்தது. துணை இல்லாததால் குடிக்கவும் தோன்றாமல் பழக்கத்தின் காரணமாக அதை விடவும் முடியாமல் பரிதவித்து முடிவில் வெறும் சோடாவை மாத்திரம் குடித்து விட்டு விளக்கை அணைத்தான் அவன்.

**வி**நோத் வீட்டுக்கு வந்து ஒரு வாரத்திற்கும் மேல் ஆகிவிட்டது. அது ஜெய்கருக்கு மாத்திரம் அல்ல, பானுவுக்கும் சற்று வியப்பை அளித்தது.

அன்று காலை விஜி வந்திருந்தாள்.

''அவர் இப்போதுதான் ஆபீஸ் போனார். உன்னைப் பார்த்து ரொம்ப நாட்கள் ஆகிவிட்டதே என்று வந்தேன். இன்று என்னுடன் வாயேன். ராத்திரி அவரை ஸ்கூட்டரில் கொண்டு விடச் சொல்றேன்.''

ஒரு பெண்ணின் கைவண்ணம் வீட்டை எவ்வளவு நேர்த்தியாக்குகிறது என்று தோன்றியது பானுவுக்கு. விஜி அவ்வளவு கச்சிதமாக வைத்திருந்தாள் வீட்டை.

''பானு! உன் உதவியை என்றும் மறக்கவே முடியாது. அவரும் அதைத்தான் அடிக்கடி சொல்வார். இப்பொழுது என்னிடம் உயிராக இருக்கிறார்... அதெல்லாம் இருக்கட்டும்.... இந்த பவானி நகரில் ஒரு பிரசித்தி பெற்ற பார்க் இருக்கிறது. உனக்கு தெரியுமா? சாயங்கால வேளையில் லேட்டும் நீரூற்றுமாய் அழகாக இருக்கும். அங்கே போகலாம் சாயந்திரமாய்...''

ஒரு ஒதுக்குப்புறமான புல் தரையில் ரமணி, விஜி, பானு மூவரும் அமர்ந்தனர். பொதுவாக ஏதோ பேசினாலும், ரமணி அடிக்கடி கைக்கடிகாரத்தைப் பார்ப்பதும், பிறகு விஜியை நோக்கிச் சிரிப்பதுமாக இருந்ததைப் பார்க்க வேடிக்கையாக இருந்தது. பானுவுக்கு 'பாவம்! எத்தனையோ நாட்களுக்குப் பிறகு சேர்ந்திருக்கிறார்கள்! அவர்களுக்குள் எத்தனையோ இருக்கும்...'

அவன் சற்றும் எதிர்பாராத விதமாக பின்புறமாக வந்து நின்ற விநோத்தைக் கண்டு வியப்பும் திகைப்பும் அடைந்தாள் பானு.

''ஹலோ...'' ரமணி வரவேற்றதும் இது யதேச்சையாய் நடந்த சந்திப்பு அல்ல என்று தோன்றியது அவளுக்கு.

மூவருக்கும் சற்றுத் தள்ளி அமர்ந்தான் அவன். ரமணி பொதுவாகப் பேசிவிட்டு, ''விஜி வாயேன்! கொஞ்ச தூரம் சுற்றி விட்டு வரலாம்'', என்று சொல்லிவிட்டு பானுவின் பதிலுக்குக் காத்திராமல் அவர்கள் விரைந்ததும் பானுவுக்குப் பெரும் புதிராக இருந்தது.

''உங்களுடன் கொஞ்சம் பேசவேண்டும்...'' விநோத் தயக்கத்துடன் கூறினான்.

# கொஞ்சு மொழி செல்வம் குறையற்று வாழ்ந்திட

உங்கள் குழந்தைக்கு
போலியோ சொட்டு மருந்து அளித்து
இளம்பிள்ளை வாத நோயிலிருந்து
பாதுகாப்பு அளித்திடுங்கள்.

மருத்துவரின் மேற்பார்வையில் போலியோ
சொட்டு மருந்தும், ட்ரிபிளான்டிஜெனும்
அளிக்கப்படும் இடம்:




தமிழ்நாடு தாதா
பார்மாசுடிக்கல்ஸ் லிமிடெட்

10, பத்மாவதியார் சாலை, ஜெய்பூர் நகர்
(ஆயிரம் விளக்கு மசூதி அருகில்)
சென்னை-600 086, தொலைபேசி 810646

ஞாயிறு : காலை 8.30 முதல்
பகல் 12.30 வரை

புதன் : காலை 8.30 முதல்
பகல் 10.30 வரை

சனி : மாலை 3.00 முதல்
6.00 வரை

"அப்படியா... இது முன் கூட்டியே திட்டமிட்டதா? அதுசரி... நீங்கள் இப்போது சரியாகத்தானே இருக்கிறீர்கள்...?"

அந்த அடி பலமாகப் பட்டிருக்க வேண்டும் வினோத்துக்கு.

"நான் அதையெல்லாம் விட்டு இரண்டு வாரமாகி விட்டது. நீங்கள் இரண்டு முறை என் வீட்டுக்கு வந்திருக்கிறீர்கள் என்று நினைக்கிறேன். உங்கள் கைப்பையை அன்று என் வீட்டில் பார்த்தவுடன் தான் புரிந்தது. என்ன மாயமோ மந்திரமோ... என் வீடே தலைகீழாக மாறிவிட்டது. நீங்கள் கால் வைத்த இடம் அழகாகத்தான், அமைதியாகத்தான், திருத்தமாகத் தான் இருக்கும் என்பதற்கு சான்றாக... இன்று... நான்... நான்..." அவன் முடிக்கத் தெரியாமல் திணறுவதை, சற்று நிதானத்துடன் தலை கவிழ்ந்து கேட்டுக் கொண்டிருந்தாள் அவள்.

"நான் ரமணியிடம் சத்தியம் செய்திருக்கிறேன் இனி குடிப்பதில்லை என்று. என் குடும்பமும் நல்ல குடும்பம்தான். நான் ஏதோ சகவாசத்தில் இப்படி..." அவன் மேல் பானுவுக்குச் சற்று பரிதாபமும் ஏற்பட்டது.

"நான் என்ன சொல்ல வருகிறேன் என்றால்... நீங்கள்... உங்கள் மனம் தெரிந்தால்... நானே ரமணி விஜியுடன் என் தாயாரை அனுப்பி வைப்பேன்..."

இவ்வளவு அருகில் வினோத்தை இந்தவிதமாக சந்திப்போம் என்று பானு நினைக்கவில்லை.

அவள் தன் மனதை இன்னும் பூரணமாக உணரவில்லையே! இதற்கு மேல் தெளிவாக இனிமேல் அவனால் அவன் மனதை உணர்த்த முடியாது... இந்த ரமணியும் விஜியும் எங்கே போனார்கள்?

அவள் மெதுவாக நிமிர்ந்து வினோத்தை நேருக்கு நேர் பார்த்தாள். அதன் தோற்றத்திலும் தான் எத்தனை மாறுதல்! அவன் அகன்ற விழிகளும், தீர்க்க நாசியும், சற்றே நீண்ட முகவாயும் அவன் அன்பை யாசித்து நிற்பதைப் புரிந்தபோது...

அவள் தன் அன்பின் அடையாளத்தைப் பார்வையில் நிறுத்தி, சற்று சிரித்துத் தலை குனிந்தாள்.

தூரத்தே ரமணியும் விஜியும் அவர்களையே நோக்கிக் கொண்டு வருவது நிழலாகத் தெரிந்தது.

சற்று தலை தாழ்த்தினாலும், வினோத்தின் உண்மையான சந்தோஷத்தை ரசிக்கவும் முடிந்தது.

உண்மைதான்! இந்த நாட்டில் கங்கை என்றும் பாய்ந்துக் கொண்டே இருக்கும்! சஞ்சலங்களை துயரங்களை, தூசுகளை அடித்துக் கொண்டு, நன்மையை பாவனத்தை, பரப்பிக் கொண்டு, ஜீவநதியாய் ஓடிக்கொண்டே தான் இருக்கும்!



# கருணைக்கொரு ருக்மணி



—ஆனந்தி—

கலை, மொழி, கைத்தொழில், சமூகப் புரட்சி, கல்வித்துறை, ஆன்மீகத் துறை, ஜீவகாருண்யம், முதியோர் நலம் இத்தனை துறைகளிலும் இடைவிடாமல் பணி செய்து நாட்டில் ஒரு விழிப்புணர்ச்சியை உண்டாக்கிய திருமதி ருக்மிணி தேவிக்கு இந்த ஆண்டு பிப்ரவரி மாதம் 29—ஆம் தேதியன்று எண்பது ஆண்டுகள் நிறைகின்றன.

திருமதி. ருக்மிணி தேவியவர்கள் கலைத் துறையில் செய்திருக்கும் தொண்டுகளைப் பாராட்டி பாரத அரசாங்கம் அவருக்குப் பத்ம பூஷண் என்ற பட்டம் அளித்துக் கௌரவித்திருக்கிறது. ஸங்கீத, நாடக அகாடமி போன்ற ஸ்தாபனங்களும் அவரை கௌரவித்திருக்கின்றன. கலாக்ஷேத்திரம் என்ற கலைக் கல்லூரியை நிறுவி நூற்றுக் கணக்கான கலைஞர்களை உருவாக்கியதோடு இருபத்தைந்து நாட்டிய நாடகங்களைத் தயாரித்துப் புகழ் பெற்றிருக்கிறார். இதெல்லாம் யாவரும் அறிந்த விஷயம்.

மேலும் மகா மஹோபாத்யாய டாக்டர் உ. வே. சாமிநாத ஐயர் அவர்களிடம் தாமே சேகரித்த சுவடிகளும், அவரே வெளியிட்ட நூல்களும் அடங்கிய ஒரு சிறந்த நூல் நிலையத்தை நிர்வகித்துக் தமிழ் அன்னைக்குத் தொண்டு செய்து வருகிறார்.

தமிழ்நாட்டுக் கைத்தறிச் சேலைகளின் வண்ணத்தையும், வனப்பையும், உறுதியையும் நீலை நாட்டிக் கரை போட்ட சேலைகளின் அழகை எடுத்துக் காட்டுவதற்காக நாற்பது ஆண்டுகளுக்கு முன்பே ஒரு கைத்தறிக் கூடத்தை நிறுவினார். கலாக்ஷேத்திரா சேலை என்று பட்டுப் புடவைகளும், முக்கியமாகக் கரை போட்ட நூல் புடவைகளும் மிகவும் பிரசித்தி அடைந்திருக்கின்றன.

சமூகப் புரட்சி செய்தவர்களில் முதன்மையானவர் ருக்மிணி தேவி. இவர் ஆங்கிலேயரான டாக்டர் அருண்டேலை மணம் செய்து கொண்ட போது, ஹிந்துக்கள், ஆங்கிலேயர், தேச பக்தர்கள் எல்லோருமே அதை எதிர்த்தார்கள். நாட்டில் ஒரு புயலே வீசியது. இதையெல்லாம் பொருட்படுத்தாமல் தைரியமாக டாக்டர் அருண்டேலைத் தமது பதினாறும் வயதில் மணந்து கொண்டார் ருக்மிணி தேவி.

ஆன்மீகத் துறையிலும் ருக்மிணி தேவியின் பணி சிறப்பிடம் பெறுகிறது. சிறுவயதிலேயே அன்னி பெஸண்ட் அம்மை

யாரின் காந்த சக்தியினால் கவரப்பட்டு, அவருடைய பணிகளில் தாமும் ஈடுபட விரும்பினார். பிரும்மஞான சங்கத்தின் பல முக்கியமான தலைவர்களுடன் பழகும் அரிய வாய்ப்பு இவருக்குக் கிடைத்தது. இந்தச் சங்கத்தின் இளைஞர் குழுவுக்குத் தலைவரானார். சுமார் ஐம்பது ஆண்டுகளுக்கு மேல் இந்தியக் கலைகள், இந்தியக் கலாசாரம், இந்து சமயம் இவற்றின் உயர்வையும், சிறப்பையும் உலகத்துக்கு எடுத்துக் கூறும் அரசு சார்பற்ற நல்லெண்ணத் தூதுவராகவே விளங்கி வந்திருக்கிறார். பிறந்த பொன்னாட்டுக்கு இவர் செய்துள்ள பணிகளில் தலையானது இதுவே எனலாம்.

கல்வித் துறையிலும் ருக்மிணி தேவியின் பணிகள் நம்மை அயரச் செய்கின்றன. கலாக்ஷேத்திரம் என்ற கலைக்கல்லூரியை நாற்பத்தெட்டு ஆண்டுகளுக்கு முன்பாகவே நிறுவித் தாமே நிர்வகித்து வருவதுடன் நின்று விடவில்லை. டாக்டர் அருண்டேல் அவர்களும் இவரும் சேர்ந்து பெஸன்ட் அம்மையார் விரும்பியபடி 1934-ஆம் ஆண்டில் ஒரு பள்ளிக்கூடத்தைத் தொடங்கினார்கள். பாரதப் பண்பாட்டுடன் ஒரு குருகுலம் போல இந்தப் பள்ளி நடத்தப்பட்டது.

அடித்தும், மிரட்டியும், தண்டித்தும் கல்வி புகட்டிய நாளில் அன்பு வழிக் கல்வியை நமது நாட்டில் அறிமுகம் செய்து வைத்தார்கள். அப்போது சிறு குழந்தைகளுக்கான பள்ளியும் தொடங்கப்பட்டது.

''இத்தனை விதமான காரியங்கள் செய்கிறீர்களே! உங்களுக்கு ஆத்ம திருப்தியளிக்கும் பணி எது?'' என்று ருக்மிணி தேவியைக் கேட்டால் அவர் தயக்கமின்றி ''வாயில்லாப் பிராணிகளுக்காக அவைகளின் துன்பத்தை ஓரளவு குறைப்பதற்காக உழைத்ததே எனக்குத் திருப்தியளித்த காரியம்'' என்று கூறுகிறார்.

1954-ல் இவர் பார்லிமெண்டில் கொண்டு வந்த மசோதா பெரும் பரபரப்பை ஏற்படுத்தியது. பண்பாடுள்ளவர்கள் என்று நம்மைக் கருதிக் கொள்கிறோம். நம்மோடு இந்த உலகத்தில் வாழ்ந்து மனித குலத்துக்கு அளவில்லாத நன்மைகளைச் செய்யும் நமது சகோதரர்களான மிருகங்களுக்கு மனித இனம் இழைக்கும் கொடுமைகள் பயங்கரமானவை. இதைச் சட்ட பூர்வமாகத் தடுப்பதற்கு ருக்மிணி தேவி ஒரு மசோதாவைக் கொண்டு வந்தார். அப்போது எம்.பி.யாக இருந்த பெரும்பான்மையினர் இந்த விஷயத்தை மிகவும் அநுதாபத்துடன் அணுகி ஆதரவு அளிக்கவும் தயாராக இருந்தார்கள்.

ருக்மிணிதேவி தாம் நினைத்தபடி பிராணிகளை வதைப்பதையும், வாயில்லா ஜீவன்களைப் பிடித்துக் கடுமையான சோதனைகளுக்காக அயல்நாடுகளுக்கு அனுப்புவதையும், தடுக்க முடியா விட்டாலும் பார்லிமென்டிலும், மத்திய மந்திரி சபையிலும் இதைப் பற்றிய விழிப்புணர்ச்சியும் விவாதமும் கொண்டு வந்ததே ஒரு பெரிய வெற்றியாகும்.

மேல்சபை அங்கத்தினர்கள் அடங்கியதொரு குழு, நாடு முழுவதுமுள்ள நகரங்களில் பிராணிகள் எவ்வாறு கொல்லப்படுகின்றன, அவற்றுக்கு என்ன கொடுமைகள் இழைக்கப்படுகின்றன என்று ஆராய்வதற்காக நியமிக்கப்பட்டது. இந்தக் குழுவின் அறிக்கையை அடிப்படையாகக் கொண்டு பிராணிகளின் நலனைப் பேணும் சீர்திருத்தங்கள் அடங்கிய ஒரு சட்டத்தை 1960-ல் ராஜ்யசபையில் நிறைவேற்றினார்கள்.

உணவுக்காகப் பிராணிகளை வதைப்பது ஒரு பக்கம், அழகுக்காகவும் ஆடம்பரத்துக்காகவும் பிராணிகளை வதைப்பது ஒருபக்கம்.

மிங்க் என்ற பிராணிக்குத் தன்னைக் கடுங்குளிரிலிருந்து காத்துக் கொள்ள மென்மையான ரோமத்தைக் கொடுத்திருக்கிறாள் இயற்கை அன்னை. பணக்காரப் பெண்மணிகளின் தோள்களை அழகு செய்வதற்காக ஆயிரக்கணக்கான மிங்க் என்னும் பிராணிகள் பொறிகள் வைத்துப் பிடிக்கப்படுகின்றன.

அயல் நாடுகளிலிருந்து வரும் வாலை மிருந்த ஜெவ்டுகளை ஸ்திரீகளாகிய நாய்



## உடனடியாக பதிவு செய்து கொள்ளுங்கள்



✲ 100% அபாயமற்றது.
✲ 100% மண்ணெண்ணெய் மிச்சம்.
✲ 100% அதிக வெப்பம்.
✲ பின் செய்ய வேண்டியது இல்லை.
✲ பாத்திரங்கள் கரி பிடிக்காது
✲ பர்னருக்கு 5 வருட உத்திரவாதம்

★

எங்களின்

**இன்டோ ஜெர்மன்**

கெரோசின் ஸ்டவ்வை உபயோகித்து கேஸ் ஸ்டவ்வைவிட அதிக பலன் பெறுங்கள்.

★

குறிப்பு: சென்னை நிலுத் திடலின்பொருட் காட்சியில் உள்ள எங்களின் ஸ்டாலிற்கு விஜயம் செய்யுங்கள்.

**ராதிகா ஸ்டவ்**



✲ 100% அபாயமற்றது.
✲ சிக்கனமானது.
✲ பம்ப் செய்ய வேண்டிய அவசியமில்லை.
✲ திரி கிடையாது.
✲ எரியும்பொழுதே எண்ணெய் ஊற்றலாம்.

விநியோகஸ்தர்கள் : **ஹாட்வெல்,** நெ. 34, நாதமுனி தெரு, தி. நகர், சென்னை-17

---

# ஸீக்கோ பித்தளையினல் செய்யப்பட்ட எலக்ட்ரானிக் காஸ் லைட்டர்

**2** வருட உத்திரவாதம்

**SEIKO®**







**ELECTRONIC GAS LIGHTER**

**SHANTI AGENCIES**

151, Govindappa Naicken Street, Madras-1 Ph: 33983

*வியாபார விசாரணைகள் வரவேற்கப்படுகின்றன*

KAN ADS 641

ஆசையோடு வாங்கி உபயோகிக்கிறோம். அவற்றில் பின் ஒரு சோக காவியமே அடங்கியிருக்கிறது என்பது அநேகம் பேருக்குத் தெரியாது.

ஒரு வகைத் திமிங்கலத்தின் உடலிலிருந்து எடுக்கப்படும் திரவம் இந்த லெவண்டோன் ஆவியாகிவிடாமலிருப்பதற்காக உபயோகிக்கப்படுகிறது. இதன் பொருட்டு பிரும்மாண்டமான திமிங்கலங்கள் கொடுமையான முறையில் கொல்லப்படுகின்றன. ஒரு திமிங்கலத்துக்கு ஆபத்து வந்து அது பிடிபட்டால் நூற்றுக்கணக்கான திமிங்கலங்கள் அதைக் காப்பாற்றுவதற்கு உதவி செய்ய வரும். இதைப் பயன்படுத்திக் கொண்டு அன்பும் உபகார சிந்தையும் மிகுந்த இந்தப் பிராணிகளைக் கொன்று குவித்து விடுகிறார்கள். கேட்கவே சங்கடமாக இருக்கிறது.

இதையெல்லாம் தடுக்க வேண்டுமென்று பிரசாரம் செய்ய இங்கிலாந்து தேசத்தில் ''கொடுமை செய்யா அழகு'' ''Beauty without Cruelty'' என்ற ஒரு ஸ்தாபனம் இயங்கி வருகிறது. அதன் உபதலைவராக இருந்து வருகிறார் ருக்மிணிதேவி.

இவ்வாறு நமது தேசத்தில் மிருகங்களின் நலனைப் பற்றிய ஒரு கருத்து உருவாவதற்கு இடையறாமல் உழைத்தவர்களில் முக்கியமானவர் ருக்மிணிதேவி. பசுவை மகாலக்ஷ்மியாகவும் காமதேனுவாகவும் வழிபட்ட நாடு நம்முடையது. அத்தனை தெய்வங்களுக்கும் விதம் விதமான மிருக வாகனங்களைச் செய்து வைத்துப் பெருமைப்படுத்திய நாடு.

இந்த நாட்டில் அருள்நெறி தழைத்தோங்கப் பாடுபட்ட ருக்மிணி தேவியைக் கைகூப்பி எல்லா உயிரும் தொழும் என்பது நிச்சயம்.

தேசிகோத்தமா என்ற சிறப்பான பட்டம் சாந்தி நிகேதன் விசுவபாரதி பல்கலைக்கழகத்தால் இவருக்கு வழங்கப்பட்டிருக்கிறது. பிராணி மித்ரா என்ற பட்டமும் வழங்கப்பட்டிருக்கிறது.

இந்த அழகிய பொருளுள்ள பட்டங்கள் இவரை மிகவும் பொருத்தமாக அலங்கரிப்பதைக் கண்டு மகிழ்கிறோம்.

---

# மருந்துகளினால் வரும் ஆபத்து

நோயைப் போக்கும் மருந்துகளே மேலும் சிக்கல்களை ஏற்படுத்துவதாக, பெரிய ஆபத்துக்களை ஏற்படுத்துவதாகக் கூட மாறி விடுகின்றன. இதற்குக் காரணம் இப்போது போலி மருந்துகளும், கலப்பட மருந்துகளும் அதிகமாகி விட்டதுதான். இவற்றை எப்படித் தடுப்பது.

1. எப்போது மருந்துகளை வாங்குவதாக இருந்தாலும் நன்கு தெரிந்த, பிரபலமான, நிலையான, பதிவுசெய்யப் பெற்ற கடைகளிலேயே வாங்குங்கள்.

2. மருந்துகளை வாங்கியவுடன் அதைத் தயாரித்த தேதியையும், மருந்தின் காலம் முடிவடையும் தேதியையும் பாருங்கள். தயாரித்து நீண்டகாலமான மருந்துகளைச் சில சமயம் நம் தலையில் கட்டி விடுவார்கள். இதனால் பல ஆபத்துக்கள் ஏற்படுவதுண்டு.

3. தயாரிப்புக்கான லைசென்ஸ் எண்ணையும் பாருங்கள்.

4. மருந்துகள் காலியானவுடன் பாட்டில்களை அழித்து விடுங்கள். சில காசுகளுக்கு ஆசைப்பட்டுவிலைக்குப் போட வேண்டாம். அந்த லேபிள், பாட்டில்களை வைத்தே போலி மருந்துகள் தயாரிக்கப்படுகின்றன.

5. எப்போதும் டாக்டரால் எழுதிக் கொடுக்கப்பட்ட மருந்துகளையே வாங்குங்கள். தானே வைத்தியனாக மாறுவது மிகவும் ஆபத்து. முன்பு இந்த நோய்க்கு இந்த மருந்துதானே எழுதிக் கொடுத்தார் என நீங்களாக நிச்சயம் செய்து வாங்க வேண்டாம்.

6. போலி அழகு சாதனங்களும் கூட உடலுக்கு மிகவும் தீங்கு விளைவிக்கக் கூடியவை. இவை சருமத்திற்குக் கெடுதல் விளைவிக்கக் கூடியதாக இருக்கும். எனவே எந்த அழகு சாதனத்தை வாங்கினாலும் முதலில் சிறிதளவு எடுத்து மணிக்கட்டில் தடவிக் கொள்ளுங்கள். அப்படியே எட்டு மணி நேரம் வைத்திருங்கள். ஏதேனும் எரிச்சலோ, நமைச்சலோ இருந்தால் வாங்கிய கடைக்காரரிடமே திருப்பிக் கொடுத்து இது கலப்படம் எனப் புகார் செய்யச் சொல்லுங்கள்.

7. மருந்துகளையோ அழகு சாதனங்களையோ வாங்கும்போது 'ஸ்டேண்டர்டான' கம்பெனிகளுடையதையே வாங்குங்கள்.

(இதுபோல பல உபயோகமான குறிப்புக்கள் அடங்கியது 'ஐடியல் ஹோம் அண்டு குட் ஹவுஸ் கீப்பிங் ரெஃபரன்ஸ் புக்'. இதிலிருந்து மேலும் சில குறிப்புக்களை அடுத்த இதழில் காணலாம்.)

# திருமண மலர்

வயது 25. அஷ்டசஹஸ்ரம். கௌண்டின்ய கோத்திரம். நீலகிரியில் Deyence Dept.-ல் Typist ஆகவும் அழகும் நிறமும் உள்ள பெண்ணுக்கு. 5' 5'' உயரமும் 1000 வருமானமும் வேலையில் உள்ள மணமகன் தேவை. ஜாதகம் பார்க்கவேண்டிய அவசியமில்லை. வரதட்சணை விரும்பாதவர்கள் விண்ணப்பிக்கலாம். பெண்ணுக்கு சென்னை. கோவை, பங்களூர் மாற்றல் வாங்கலாம். உட்பிரிவுகள் சம்மதம். பெட்டி எண்: 1192.

''தெலுங்கு வேலநாடு ஸ்ரீவத்ச கோத்திரம். விசாகம் 1-ம் பாதம். 22 வயது 5 அடி 2 அங்குல உயரமுள்ள அழகிய பி. ஏ. படித்துக் கொண்டிருக்கும் பெண்ணுக்குப் பட்டதாரி மணமகன் தேவை. ஜாதகத்துடன் விண்ணப்பிக்கவும். பெட்டி எண்: 1193.

Aliance sought from qualified well-placed Bridegroom between 32-35 for slim good-looking Kerala Brahacharanam Iyer girl B.Sc., B. Ed., (Employed) domiciled Bangalorean-Bharadwaja Anshum, 30, 156.35 Cms. Reply with Horoscope Bio-data Box: 1194.

செங்குந்த முதலியார் வகுப்பைச் சேர்ந்த மத்திய அரசில் பணியாற்றும் 31 வயது பட்டதாரி பெண்ணுக்கு நிரந்தர. அரசு உத்தியோகத்திலிருக்கும் அதே வகுப்பைச் சார்ந்த மணமகன் தேவை.'' பெட்டி எண்: 1195.

வடமான், வாதூல கோத்திரம், 35வயது ஆயில்யம் 4-ம் பாதம் குடும்பப்பாங்கான சிகப்பு நிறமுள்ள பெண், பையன் இருத்திகை 39 வயது மாதம் ரூ. 1000- (ரூபாய் ஆயிரம்) நல்ல உத்தியோகம். மணமகனும் மணமகளும் தேவை. வடமான் விசேஷம். பிரஹசரணம் பாதகமில்லை. பெண் கொடுத்துப் பெண் எடுக்க சம்மதம். பெட்டி எண்: 1196.

மத்திய அரசில் பணியாற்றும் 42 வயது வடமான், கௌண்டின்ய கோத்திரம். மாதம் ரூ. 1500 வருமானமுள்ள பட்டதாரி வரனுக்கு 35 வயதிற்குள் உயர், மத்தியதர வகுப்பிலிருந்து பெண் தேவை. 39 வயது பட்டதாரி சகோதரிக்கு நல்ல படிப்பு, வேலை, வசதியுள்ள மணமகன் தேவை. பெட்டி எண்: 1197.

மாத வருமானம் 3900- அரசு வேலை, வயது 34, மனைவியிழந்தவர், மூன்று வயது ஆண் குழந்தை. நடுத்தர குடும்பம். இவருக்குப் பெண் தேவை. இளம் விதவைகளும் தொடர்புகொள்ளலாம். பெட்டி எண்:1198

''கர்க்க' கோத்திரம், வடமான், ஆயில்ய நட்சத்திரம், மாநில அரசில் பணிபுரியும் (டி. வி. ஏ. 35 வயது பெண்ணிற்கு. 40-42 வயதிற்குள் அரசு அல்லது தனியார் துறையில் நிரந்தர வருமானம் உள்ள மணமகன் தேவை. உட்பிரிவுகள் சம்மதம். ஜாதகம் இடையாது. பெட்டி எண்: 1199.

பாங்கில் ஆபீசராக இருக்கும் பையனுக்கு (வயது 30), உயரமான, படித்த. ஆத்ரேய கோத்திரம் அல்லாத தமிழ் வடமான் பெண் தேவை. பெண்ணின் ஜாதகம், போட்டோவுடன் எழுதவும். பெட்டி எண்: 1200.

36 வயதுள்ள எம். ஏ. எம். எட் படித்து அரசு பள்ளியில் பணிபுரியும் ஸ்மார்த்தாள் கல்யஜூஸ் ' தமிழ் அய்யர் பிரிவினைச் சேர்ந்த மூலம் நான்காம் பாதம். செவ்வாய் தோஷமுள்ள பையனுக்குத் தகுந்த வரன் தேவை. உட்பிரிவுகள் சம்மதம். பெண் அரசு வேலையில் இருத்தல் உத்தமம். போட்டோ ஜாதகத்துடன் விண்ணப்பிக்கவும். பெட்டி எண்: 1201.

உத்திரட்டாதி, வயது 23, எஸ்.எஸ். எல். சி., வீணை, தையல் வீட்டு வேலை தெரிந்த அழகான குடும்பப்பாங்கான பெற்றோர் நல்ல நிலையிலிருக்கும் பிராமணப் பெண்ணுக்குப் பரந்த மனமுள்ள நல்ல நிலையிலிருக்கும் பிராமண வரன்தேவை. பெண் கல்யாணமாகி கணவனும் வீட்டாரும் செய்த கொடுமையால் 2 மாதங்களில் விவாகரத்து பெற்றவள். மனைவியை இழந்து குழந்தையில்லாதவர்களும் விண்ணப்பிக்கலாம். பெட்டி எண்: 1202.

ஷடமர்ஷண கோத்திரம், பிருகசரணம், ஆயில்யம், 26 வயது தனியார் கம்பெனியில் மாதம் ஆயிரம் சம்பாதிக்கும், மாநிறமுள்ள அழகான நற்குணமுள்ள பிராமணப்பெண்ணுக்கு, நன்கு படித்து சென்னையில் நிரந்த வேலையிலிருக்கும் பரந்த மனப்பான்மையுடைய 32 வயதிற்குட்பட்ட ஐயர் மணமகன் தேவை. ஜாதகம் வரதட்சணையில்லை. போட்டோ விவரங்களுடன் விண்ணப்பிக்கவும். உட்பிரிவுகள் சம்மதம். பெட்டி எண்: 1203.

''உதித்திய கோத்திரம், வடமான், கேட்டை நக்ஷத்திரம், பி. ஏ. இறுதியாண்டு. 23 வயது. நல்ல குடும்பப் பாங்கான

பெண்ணிற்கு படிப்புள்ள பொருத்தமான வரன் தேவை. (உட்பிரிவு பாதகமில்லை) தனியார் நிறுவனம், பாங்க் அல்லது அரசாங்க வேலையிலிருப்பவர்கள், ஜாதகத்துடனும், விபரங்களுடனும் விண்ணப்பிக்கவும். பெட்டி எண்: 1204.

24 வயது. செல்லே, பிரஹசரணம்—ஷடமர்ஷண கோத்திரம் — ரோகிணி நட்சத்திரம், தனியார் நிறுவனத்தில் பணி புரியும் மாதம் ரூ. 700 சம்பளம் பெறும் தமிழ் ஐயர் பையனுக்கு சென்னையில் பணி புரியும் பெண் தேவை. உட்பிரிவுகளும் சம்மதம். ஜாதகத்துடன் விண்ணப்பிக்கவும். பெட்டி எண்: 1205.

32 வயது 150 செ. மீ. உயரம் மாநிறம். சித்திரை துலா ராசி, வேலை அனுபவமுள்ள குடும்பத்திற்குப் பாங்கான கௌண்டின்ய பிருஹசரண நல்ல குடும்பம். பட்டதாரிப் பெண்ணிற்கு நல்ல வேலையில் உள்ள பட்டதாரி மணமகன் தேவை. உட்பிரிவு எதுவும் சம்மதம். பெட்டி எண்: 1206.

**திருமண மலர்ப்பகுதியில் விளம்பரம் செய்ய கட்டணம் ரூ. 30/- தொகையை 'மங்கையர் மலர்' என்ற பெயருக்கு போஸ்டல் ஆர்டராக மட்டுமே அனுப்பவேண்டும். ஒரு விளம்பரத்தில் ஒருவருக்கு 30 வார்த்தைகளுக்குள் விவரங்கள் தர வேண்டும். பதில் அனுப்புபவர்கள் ''விளம்பரதாரர், பெட்டி எண்.... c/o மங்கையர் மலர், கிண்டி, சென்னை-600032 என்ற விலாசத்துக்கு அனுப்பவும். தனிப்பட்ட கடிதப் போக்குவரத்து கிடையாது.**

மத்வ, கன்னடம், பாரத்வாஜ 27 வயது. 10—ஆம் வகுப்பு முடித்த, குடும்பப்பாங்கான, தையல் தெரிந்த பெண்ணிற்கு மாப்பிள்ளையும், அன்னாரின் சகோதரர், 34 வயது. பி. ஏ., மாநில செஜட் அலுவலர், மாதம் ரூ. 1150]- பெறுபவருக்கு, மணமகளும் தேவை. மத்வ மகாராஷ்ட்ரா பேசுபவர்களும், பெண் கொடுத்து வாங்க உள்ளவர்களும் கடிதத் தொடர்பு கொள்ளவும். பெட்டி எண்: 1207.

Non - Bharadwaja Broad-minded well-settled bridegroom for medium complexion 26/162 cms (B.Sc.) Iyer girl. Sub-sect, no bar. slightly physically handicapped No dowry simple marriage. Reply with Horoscope Box No: 1208.

ஸ்ரீவத்ஸம், வடமான், 32 வயது. ரேவதி. 10—வது வரை படித்த அழகான குடும்பப் பொறுப்பு மிக்க பெண்ணுக்கு நிரந்தர வேலையில் உள்ள [வடமான்] பிரஹசரணம் வரன் ஜாதகம் உடன்தேவை ''2—வது திருமண'' கோரிக்கை வரன் ஜாதகங்களும் கவனிக்கப்படும். அவசியமான—முக்கியத் தேவைகளுடன் நடுநிலைமையில் திருமணம் நடத்தித் தரப்படும். பெட்டி எண்: 1209.

46 வயதுள்ள சுத்தசைவ வேளாள பட்டமேற்படிப்புப் படித்த நல்ல சிவப்புள்ள ஆசிரியர் வேலை பார்க்கும் மணமகனுக்கு (சைவ முதலியார்) வேளாளர், பட்டம் பெற்ற சிவப்பு நிறமுள்ள நல்ல குடும்பப் பெண் தேவை. முதல் திருமணம். ஜாதகமும் போட்டோவும் அனுப்பவும். பெட்டி எண்: 1210.

வடமான். கௌண்டின்ய கோத்திரம். ரேவதி நட்சத்திரம். பி. எஸ். ஸி., எம். பி. பி. எஸ்., வயது 36, 5' 4'' உயரம். அரசாங்க டாக்டராகவும், தனி மருத்துவமனையும் உள்ள அழகிய பெண்ணிற்கு நல்ல உத்தியோகத்தில் உள்ள நன்கு படித்த பட்டதாரி மணமகன் தேவை. உட்பிரிவுகள் பரவாயில்லை. பெட்டி எண்: 1211.

தமிழ் ஐயர், அஷ்டசஹஸ்ரம், பௌரகுத்ஸ கோத்திரம், மூலம் (2—ம் பாதம்), 34 வயது. பி. யு. சி. படித்து, தையல் தெரிந்த, வேலைக்குப் போகும் தகுதி பெற்ற, குடும்பப்பாங்கான தற்பொழுது தனியார் கம்பெனியில் மாதம் ரூ. 500]- வருமானம் பெறும் பெண்ணிற்கு, குழந்தை இல்லாமல் மனைவியை இழந்தவராக இருந்தாலும் (விவாகரத்து செய்தவராக இருக்கக்கூடாது) சிறு ஊனம் உள்ளவராக இருந்தாலும், நல்ல வருமானம் உள்ளவர்கள் விண்ணப்பிக்கலாம். பெட்டி எண்: 1212.

சுவாதி நட்சத்திரம், விஸ்வாமித்ர கோத்திரம், மலையாள ஐயர், 29 வயது, பி.காம். முடித்து பி. எச். இ. எல். இராணிப்பேட்டையில், வேலை செய்யும் மணமகனுக்கு நல்ல அழகும், குணமும் உள்ள பெங்க

களில் அல்லது அரசாங்க வேலையிலிருக்கும் ஐயர் மணமகன் தேவை. போட்டோவுடன் ஜாதக நகலும் அனுப்பவும். பெட்டி எண்: 1213.

Wanted Boy Engineer/C.A./Medical/MBA/ Alike Below 33 for Iyer Vadama Kausika Poosam girl, B. Com. A.C.A (ICWA Final) 5 feet, V. fair, 25 years with very slight limb perceptible. subsect no Bar. Send Horoscope to Box No: 1214.

''கௌசிக கோத்திரம், வடமாள், உத்திர நட்சத்திரம், வயது 33, பம்பாயில் மாதம் சுமார் ரூ. 1500/- சம்பாதிக்கும் எம். ஏ. இரண்டாம் ஆண்டு படித்துக் கொண்டிருக்கும் பையனுக்குத் தக்க வரன் தேவை. நட்சத்திரப் பொருத்தம் போதுமானது. வயது வரம்பு 28. வேலையிலுள்ள பெண் விண்ணப்பிக்கவும். பெட்டி எண்: 1215

தேசிய உடைமை வங்கியில் அதிகாரியாக வேலை பார்க்கும் கௌண்டின்ய கோத்திரம், அனுஷம் நட்சத்திரமுடைய கன்னி கழியாத விவாகரத்து செய்யப்பட்ட ஐயர் பெண்ணிற்கு 43–45 வயதுடைய, படித்த, பண்புள்ள மணமகன் தேவை. ஜாதகத்துடன் அணுகுக. பெட்டி எண்: 1216.

Wanted Iyengar groom for Thenkalai, Viswamithra, fair, goodlooking, 28 years, Asst. Professor, Chemistry, working in Coimbatore. Apply with complete biodata and Horoscope to Box No: 1217.

வடமாள், கார்த்திகை நட்சத்திரம், கௌசிக கோத்திரம், எஸ். எஸ். எல். ஸி., கரூரில் பிரைவேட் லிமிடெட் கம்பெனியில் டைப்பிஸ்ட்டாக ரூ. 500/- ஊதியம்பெறும் உயரம் 5' 3'' 27 வயது பெண்ணிற்கு, வங்கியிலோ, அரசுப் பணியிலோ இருப்பவர்கள் ஜாதகம், குடும்ப விவரங்களுடன் தொடர்பு கொள்ளவும். உட்பிரிவுகள் பரவாயில்லை. பெட்டி எண்: 1218.

தென்கலை ஐயங்கார், திருவோணம், மௌத்கல்ய கோத்திரம், பிறந்த தேதி: 8.8.1949; பி. எஸ்ஸி., ஆசிரியை தனியார் பள்ளியில் சம்பளம் ரூ. 400/- வடகலை சம்மதம். வரன் 1944-க்குப் பின் பிறந்தவராகவும் மத்திய / மாநில அரசாங்கத்தில் / நல்ல முறையில் இயங்கும் தனியார் துறையில்பணி புரிபவராகவும், பட்டப் படிப்போ / சமமான தொழிற்கல்வி கற்றவராகவும் மாதம் ரூ. 1000/- வருமானம் உள்ளவராகவும் தேவை. திருமணம் தகுந்த முறையில் நடத்தப்படும். பெட்டி எண்: 1219.

பாரத்வாஜ கோத்திரம், அனுஷம் நட்சத்திரம், 32 வயது அடக்கமான, குடும்பப் பாங்கான மாத்வ பிராமணப் பெண்ணுக்கு நல்ல உத்தியோகத்தில் அல்லது வியாபாரத்தில் உள்ள மணமகன் தேவை. உட்பிரிவுகள் பாதகம் இல்லை. ஸ்மார்த்தானாக இருந்தாலும் சம்மதம். பெட்டி எண்: 1220.

Wanted Non-Haritha Iyengar / Iyer Bachelors / Widowers without children 45-49 for Central undertaking Madras employed (Non- transferable) young good looking bride. Early marriage. Reply to Box No: 1221.

Proposals invited from Vadakalai Non-Bharadwaja employed boy preferably Bombay based for domestically trained employed girl age 23 - Star Visakam 4th Padam -fair complexion height 5'4'' - decent early marriage. please reply to Box No: 1222

திருநெல்வேலி சைவப்பிள்ளை வயது. 13 டெலிபோன் இலாகாவில் ரூ. 1100/- வாங்கும் வரனுக்கு, படித்த மத்திய, மாநில, பாங்க் இவைகளில் நல்ல உத்தியோகத்திலிருக்கும் அல்லது வசதியுள்ள சைவப்பிள்ளை, செட்டியார் முதலியார் வகுப்பு மணமகள் தேவை. போட்டோ, ஜாதகம், குடும்ப விவரங்களுடன் அணுகவும். பெட்டி எண்: 1223.

Proposals invited from broadminded grooms for Kasyapa Gothram Brahacharanam girl aged Thirty (Divorcee) passed S.S.L.C. KGTE Typewriting Higher Shorthand Lower also an LIC Agent for the past over five years. Box No: 1224.

தமிழ்நாடு அரசில் செக்ஷன் ஆபீசர் ரூ. 1300 சம்பளம். தாரம் இழந்தவர். மூன்று குழந்தைகள் உண்டு. 34 வயது 164 செ. மீ. அரசு உத்தியோகத்தில் உள்ள அழகிய மணமகள் போட்டோவுடன் விண்ணப்பிக்கவும். குழந்தையற்ற இளம் விதவைகளும் விண்ணப்பிக்கலாம். பெட்டி எண்: 1225.

Iyer girl 21, daughter of well placed / Retired Officer, Kasyapa Gothram, proceeding U.S.A. July Higher Studies, Parents of Iyer boys U.S.A. good affluent family correspond Box No: 1226.

திருநெல்வேலி சைவப்பிள்ளை, வயது 27, எஸ். எஸ். எல். ஸி., தையல், எம்ப்ராய்டரி

# பருவ வயதினர் பலரைப் பாதிக்கும் பிரச்னை: பரு... அது பற்றிப் பேசுகிறாள் ஒரு புதுமணக் குமரி.

'பருவ வளர்ச்சி என்றாலே பரு வரும். அதற்கு பரிகாரம் கிளியரெஸில்: பருக்களை கரைத்து கட்டுப்படுத்த உதவுகிறது.'



"அப்போது எனக்கு வயது 13. எனக்கு பரு வரத் தொடங்கியது. பரு வரும் போதெல்லாம் பல்லாண்டுகளாய் பாரா முகமாய் இருந்தேன். பின்பு ஒருநாள் என்னைப் பெண் பார்க்க ஒருவர் வந்தார். பருக்களை முகத்திலே பார்த்த உடனேயே என்னை அவர் வேண்டாம் என்றார். என் தோழி ஜெயாவின் ஆலோசனைப்படி நான் கிளியரெஸில் தடவத் துவங்கினேன். தவறாமல் அன்றாடம் இருமுறை தடவி வந்தேன். அப்புறம் ஒரு நாள் என் தோழி ஒருத்தியின் வீட்டில் மறுபடி 'அவரை' சந்தித்தேன். அவர் என்னை வைத்த கண் வாங்காமல் பார்த்தாரே பார்க்கணும். நீங்களும் நாள் தோறும் இருமுறை கிளியரெஸில் உபயோகியுங்கள். பருக்களைக் கட்டுப் படுத்துங்கள்! இப்போது ஜோடி சேர்ந்து வருகிறது கிளியரெஸில்!"

**கிளியரெஸில் வேனிஷிங் மெடிகேஷன் மற்றும் கிளியரெஸில் ஸ்கின் கலர்டு மெடிகேஷன்— ஒப்பற்ற 3-வழிச்செயல் கொண்டவை.**



1. உடைய வைக்கிறது பருக்களை



2. கரைக்கிறது பருக்களை



3. காய வைக்கிறது. பருக்களை




புதிய வேனிஷிங் மெடிகேஷன்

ஸ்கின் கலர்டு மெடிகேஷன்

**கிளியரெஸில்** உலக நம்பர் 1 முகப் பரு மருந்து க்ரீம்

OBM/8625R TAM

## சுற்றுலாப் பயணிகளின் இனிமைக்கு இனிமை!

# தமிழ்நாடு சுற்றுலா வளர்ச்சிக் கழகத்தின் இணையற்ற புதுமை!

### இன்ப உலாவுக்கென இனிய வசதிகள்!



சொகுசுப் பயணத்திற்கென டாட்சன் கார். சிக்கனப் பயணத்திற்கோ அம்பாசடர் கார். உங்கள் பண வசதிக்கேற்ப (கோச்) தொடர் சுற்றுலா.

### படகு படகு... ஆசைப் படகு!



சென்னை - மாமல்லபுரம் நெடுஞ்சாலையில் அமைந்துள்ள முட்டுக்காடு காயலில் சுற்றுலாப் பயணிகளின் இன்ப உலாவுக்கென இனிய படகோட்டும் வசதி!

### நீந்தி விளையாட நிகரற்ற நீச்சல் குளம்!



மாமல்லபுரத்திலுள்ள டிடிடிசியின் கடலோரப் புகலிடக் கட்டமைப்பில் அமைந்துள்ள புதிய நீச்சல் குளம், உங்கள் உள்ளத்தைக் கொள்ளை கொள்ளும்.

### அறுசுவையிலே அருமை!



சுவையான உணவிற்கு ஹோட்டல் தமிழ்நாடு. சென்னை தீவுத் திடலில் போர் நினைவுச் சின்னம் எதிரில் புதிய 'டிரைவ் இன்' ஹோட்டல்.

"இவ்வாண்டு பொருட்காட்சி அமைப்பாகவும், எடுப்பாகவும், தோற்றப் பொலிவோடு கவர்ச்சி மிகுந்ததாய் சிறப்புற்று விளங்குகிறது."

குடும்பத்தோடு காண வாரீர்!
கண்டு களிப்பீர்!!



**தமிழ்நாடு சுற்றுலா வளர்ச்சிக் கழகம்**
'சிவாலயா பில்டிங்' 16, கமாண்டர் இன் சீஃப் சாலை, சென்னை-600 105.
தொலைபேசி : 89581/2/3 தந்தி : TAMILTOUR டெலக்ஸ் : MS 7575

DIPR/84/(R)

ஹையர். நடுத்தரக் குடும்பம். அழகு. அடக்கம், குடும்பப்பாங்கு, தெய்வபக்தி உள்ளவள். நல்ல வேலையிலுள்ள அல்லது வசதியான பிள்ளை, முதலியார், செட்டியார் வகுப்பு மணமகன் தேவை. மனைவிஇழந்தோ ராயினும் சம்மதம். போட்டோ, ஜாதகம் அனுப்பவும். பெட்டி எண்: 1227.

சென்னையில் நல்ல கம்பெனியில் பணி புரிந்து மாதம் ரூ. 1500]- சம்பளம் வாங் கும் 28 வயது நாயுடு மணமகனுக்கு(எம்.ஏ. படித்து நல்ல வேலையில் இருக்கும் (அ) வேலையில் இல்லாத அழகும், வசதியும்உள்ள பெண் தேவை. உட்பிரிவுகள் பாதகமில்லை. உயரம் 160 செ. மீ. ஜாதகம் மற்றும் முழு விவரங்களுடன் தொடர்பு கொள்ளவும். பெட்டி எண்: 1228.

செங்குந்த முதலியார் எம். எஸ்ஸி(மேத்ஸ்) கான்பூரில் உள்ள வயது 23 நல்ல குணமும் குடும்பப் பாங்கான பெண்ணுக்கு இதே வகுப்பைச் சேர்ந்த நல்லவேலையில் இருக்கும் அரசாங்க உத்தியோகத்திலோ பாங்கிலோ உள்ள வரன் தேவை. மெட்ராஸ், டில்லி, கான்பூர், லக்னோ போன்ற இடங்களில் இருந்தாலும் நல்லது. விவரத்திற்கு உடன் ஜாதகம் போட்டோ அனுப்பிவைக்கவும். பெட்டி எண்: 1229.

வீட்டு வேலைகளைத் திறம்படச் செய்யக் கூடிய அழகான, குணநலம் மிக்க, 22 வயது நிரம்பிய எஸ். எஸ். எல். ஸி., படித்து வீட்டில் வேலையின்றி இருக்கும், ஆனால் கால் சிறிது ஊனம் உள்ள இந்து ஆதிதிரா விட வகுப்பைச் சேர்ந்த பெண்ணை மணக்க 35 வயதிற்குள்ளான ஆண்மகன் எந்த வகுப்பைச் சேர்ந்தவராயினும் ஏற்றுக் கொள்ளப்படும். பெட்டி எண்: 1230.

பிரஹசரணம் பார்கவ கோத்திரம், மூலம் நட்சத்திரம். தமிழ்நாடு அரசு திருச்சி மாவட்டத்தில் யு. டி. ஸி. ஆகப் பணிபுரியும் 5' 3'' உயரமுள்ள பட்டதாரி ஐயர் பைய னுக்கு படித்த குடும்பப்பாங்கான அழகான பெண் தேவை. உட்பிரிவுகள் சம்மதம். ஜாதகத்துடன் விண்ணப்பிக்கவும். பெட்டி எண்: 1231.

செங்குந்த முதலியார், 32 வயது, அழகு நல்ல குணமுள்ள, வீட்டு வேலைகளை நன்கு பொறுப்பாக நிர்வாகம் செய்யக்கூடிய பெண்ணிற்கு மணமகன் தேவை. 35 வய திற்கு மேற்பட்ட இரண்டாம் தார வரன்கள் மற்றும் முதலியார் வகுப்பில் இதர பிரிவின ரும் விண்ணப்பிக்கலாம். பெட்டி எண்: 1232

வங்கியில் எழுத்தராகப் பணிபுரியும் மதுரை சௌராஷ்டிரா சமூகத்தைச் சேர்ந்த நல்ல நிறமுள்ள 24 வயது மணமகளுக்கு. வங்கியிலோ அரசுத் துறை நிறுவனத்திலோ பணி புரியும் பட்டதாரி மணமகன் தேவை. பையன் உயரம் 5' 4". மார்க்கண்டேய கோத்திரம், உத்திராடம் நட்சத்திரம். பெட்டி எண்: 1233.

Non-Bharadwaja South Indian Brahmin Bridegroom from respectable family for goodlooking Tanjore Brahacharanam graduate girl -28/151 cms Rohini employed in Madras City firm, daughter of retired top Official. Horoscope and details to Box No: 1234.

Brahacharanam, Vadama, Karthikai, 42 years, Public sector employee desires to have a life partner. The girl should be employed (Transferable) and between 30-34 years. Box No: 1235.

"தொலைபேசித் துறையில் டெலிபோன் ஆபரேட்டராக மாதம் ரூ. 910/- சம்பளம் பெறும் 34 வயதான, பாரத்வாஜ கோத்திர, கார்த்திகை-2, பிரகசரண. பி.ஏ. படித்த பெண்ணுக்கு. நல்ல உத்தியோகத்திலுள்ள 40 வயதுக்கு உள்ளிட்ட பிராமண மணமகன் தேவை. உட்பிரிவுகள் சம்மதம். பெட்டி எண்: 1236.

மராட்டிய இனத்தைச் சேர்ந்த. எம்.ஏ. படித்து. மத்திய அரசு அலுவலகத்தில் ரூ. 1000/- சம்பளம் பெறும் 24 வயது பெண்ணிற்கு நல்ல வேலையிலுள்ள பரந்த மனப்பான்மை கொண்ட பட்டதாரி வரன் தேவை. ஹிந்துமத எந்த சாதியும் சம்மதம். பெட்டி எண்: 1237.

"வடமான் – வாதூல கோத்திரம் – வயது 34 – பட்டதாரி – அரசாங்க உத்தியோகம் – சம்பளம் மாதம் ரூ. 1200/- பெறும் ஐயர் பெண்ணுக்கும் – கூட அவளது தங்கை 31 – வயது – தனியார் துறையில் பணி சம்பளம் மாதம் ரூ. 700/-. இவ்விருவருக்கும் அரசு அல்லது தனியார் துறையில் வேலை பார்க்கும் நல்ல சம்பளமுள்ள பையன் தேவை. பெட்டி எண்: 1238.

Alliance invited from well-placed Bridegroom Doctor, Engineer, Audit-Officer, Bank-Officer, Lecturer etc. from respectable family for accomplished fair beautiful graduate Telugu Bride 26 years respectable family Brahmin Inter-caste parentage father retired Civil-Surgeon Box No: 1239.

வரவு சரளமாக இருக்கும். குழந்தைகளினால் குடும்பத்தில் குதூகலம் உண்டாகும்.

### துலாம்



நண்பர்களின் உதவியினால் இனிய உறவொன்று உண்டாகும். திருமணமாகாதவர்களுக்கு இம்மாதம் வரன்கள் கூடி வருவதற்கு அதிக வாய்ப்புக்கள் உண்டு. பொழுது போக்கும், வேலைப் பளுவில்லாத, தன்மையும் கொண்டதாக இம்மாதம் விளங்கும். குடும்பத்தில் சமீப காலத்தில் ஏற்பட்ட புதிய நபர் ஒருவரின் வருகையால் மகிழ்ச்சி நிலவும். வீட்டில் சுபநிகழ்ச்சிகள் ஏற்படும். பணவரவு சரளமாக இருக்கும்.

### விருச்சிகம்



உங்களுடைய திறமையினாலும், சாமர்த்தியத்தினாலும் திட்டமிட்டபடி காரியங்கள் நிறைவேறும். நீண்ட கால அடிப்படையில் நிறைவேற்றத் திட்டமிட்டிருக்கும் வேலைகளுக்குப் பொருளுதவி கிடைக்கும். வேலைக்கு முயன்று கொண்டிருப்பவர்களுக்குச் சாதகமான பதில் கிடைக்கும். வெளிநாடுகளுக்குச் சிறிய உல்லாசப் பிரயாணங்களும், குடும்பத்தில் கலகலப்பான சூழ்நிலையும் உண்டாகும். எல்லாவற்றிற்கும் பொருளாதாரம் இடம் கொடுக்கும்படி இருக்கும்.

### தனுசு



வேலைப் பளுவும், கடமைகளின் அழுத்தமும் அதிகமாகி, ஓய்வு ஒழிச்சலில்லாத மாதமாக இம்மாதம் அமையும். எந்தக்காரியத்தைச் செய்தாலும் ஒருமுறைக்கு இருமுறை சிந்திக்க வேண்டி இருக்கும். எனினும் மாத இறுதியில் உங்களுடைய உழைப்புப் பாராட்டப்படுவதுடன் மேலதிகாரிகளின் பரிவும் உங்கள்புறம் திரும்பும். குடும்பத்தில் குழந்தைகளின் காரணமாகச் செலவினங்கள் அதிகமாகும்.

### மகரம்



உங்களுக்கு மிகவும் உபயோகமான தகவல் ஒன்று வெளிநாட்டிலிருந்தோ, வேண்டியவரிடமிருந்தோ கிடைக்கும். பொது வாழ்வில் ஈடுபட்டுள்ளவர்களுக்குப் பொது மக்களிடையே ஆதரவும், புகழும் பெருகும். கலைஞர்களுக்கும், எழுத்தாளர்களுக்கும், பெரியவர்களின் சந்திப்பினால் சாதகமான சூழ்நிலை ஏற்படும். நண்பர்களின் கூட்டுறவினால் தனியார்த் துறைகளில் உள்ளவர்களுக்குப் பணத்தட்டுப்பாடு இல்லாமல் இருக்கும்.

### கும்பம்



மிகுந்த தேவையிருந்தாலொழிய வெளியூர்ப் பிரயாணங்களை மேற்கொள்ளாமல் இருப்பது நல்லது. உங்களுடைய வழக்கமான பணிகளே இம்மாதம் மிகுந்திருப்பதால் வேறெதிலும் கவனம் செலுத்த இயலாது. வழக்கு வியாஜ்ஜியங்களில் ஈடுபட்டுள்ளவர்களுக்கு ஓரளவு அலைச்சல் மிகுந்திருக்கும். பொதுத் துறை நிறுவனங்களில் உள்ளவர்களுக்குப் புதிய நபர்களின் சந்திப்புகளும், அதனால் தக்க பலன்களும் கிடைக்கும்.

### மீனம்



பல மாதங்களாக இருந்து வந்த சங்கடங்களும், தயக்கங்களும் நீங்கிச் சுமுகமான சூழ்நிலைக்குப் படிப்படியாக வர ஆரம்பிப்பீர்கள். மனத்துக்கு அண்மையான உறவின் மூலமாகச் சந்தோஷமும், பாதுகாப்பும் கிடைக்கும். பணத்தட்டுப்பாடும் ஓரளவு நீங்கிவிடும். எதிர்பாராத இடங்களிலிருந்து நல்ல செய்திகள் கிடைப்பதுடன் பண வரவும் உண்டாகலாம். குடும்பத்திலும் சண்டை சச்சரவுகள் நீங்கி, அமைதியான சூழ்நிலை கிடைக்கும்.

# "இப்போது, காளி ஸ்டெயின்லஸ் ஸ்டீல் காப்பர் பாட்டம் இல்லாது வாழ்வதை என்னால் நினைக்கக்கூட முடியாது"



"மணமான புதிதில், வாழ்நாள் முழுவதுமே சமையலறையில் சிறைதானோ என்று கலங்கி நின்றேன். காலை முதல் இரவு வரை நீளும் அதன் பிடியிலிருந்து தப்பிக்கும் வழி எதுவும் எனக்குத் தென்படவில்லை. பின்பு சில நாளில் எனக்கு காளி காப்பர் பாட்டம் பற்றித் தெரியவந்தது. செம்பு அடிப்பாகமுடைய பளபளக்கும் ஸ்டெயின்லஸ் ஸ்டீல் பாத்திர வகைதான் காளி காப்பர் பாட்டம்.

காளி, என் சமையலை பாதி நேரத்தில் முடித்துவிடுகிறது. அங்குமிங்குமாக தீய்ந்துபோதல், சில பகுதிகளில் பக்குவமாக வேகாதிருத்தல், உணவு ஒட்டிக் கொள்ளுதல் என்ற பேச்சுக்கெல்லாம் இடமேயில்லை! நல்ல சத்தான உணவும் கூட. இது மட்டுமல்லாமல், எங்கள் வீட்டு எரி பொருள் செலவில் 60% வரை கூட மீதம். காரணம்: செம்பு அடிப்பாகம், சூடுபரப்புதலை மின்னல் வேகத்திலும் ஒரேசீராகவும் செய்கிறது.

காளி காப்பர் பாட்டம் செய்யும் உதவியினால், இப்போதெல்லாம் நான் என் பணத்தையும் நேரத்தையும் இன்னும் நல்ல உற்சாகம்தரும் கலகலப்பான விஷயங்களில் செலவிடுகிறேன்.... நீங்களே சொல்லுங்கள், காளி இல்லா விட்டால் நான் எப்படித்தான் வாழமுடியும்!"




போலிகள் ஜாக்கிரதை. 30க்கும் மேலான ஆண்டுகளாக சிறப்புப் பாரம்பரியத்தை குறிக்கும் எமது ரிஜிஸ்டர்டு டிரேடு மார்க் முத்திரை உள்ளதா என கவனித்து வாங்குங்கள்.




## சமையல் நேரம் குறைப்பு, எரிபொருள் செலவு குறைப்பு, உணவுதீய்தல் தொல்லை அறவே ஒழிப்பு

காளி ஸ்டெயின்லஸ் ஸ்டீல் காப்பர் பாட்டம் பாத்திர வகை: ஸ்கில்லெட், காஸரோல், டோஸ்டர், ஃப்ரையிங் பான், ஸாஸ் பான், ஸ்டூ பான், இட்லி குக்கர், இன்னும் பல.



IS : 4536



தர முத்திரையுடன்

விற்பனை ஏஜன்ட்: **ஸ்ரீ வித்யா ஏஜன்சீஸ்**
கும்பேசுவரர் சன்னதி, கும்பகோணம்-612 001

ரீஜினல் ஏஜன்ட்டுகள்: ● ஸம்மு & கோ., த. பெ. எ. 1049, ம.கா. ரோடு, எர்ணகுளம், கொச்சி-682 011. போன்: 3119 ● ஈஸ்ட் இண்டியா கம்பெனி, 3 அம்ரித பானர்ஜீ ரோடு, (காளிகாட் P.O. எதிரில்), கல்கத்தா-700 026. போன்: 471840 ● விக்டரி மெட்டல்ஸ், 101, கேத்வாடி மெயின் ரோடு, பம்பாய்-400 004. போன்: 380075 & 354507 ● ஜே. வி. மன்சந்தா, 151/38 கரோல் பாக், புது தில்லி-110 005. போன்: 562019.



## 'கிரேன்' பேடி!

கிரண் பேடி கோவாவிற்கு மாற்றலாகிப் போனதிலிருந்து டெல்லி ஒரு திறமையான போலீஸ் அதிகாரியை இழந்து நிற்கிறது. போக்குவரத்து விதிகளை மீறிச் செல்லும் வாகனங்களுக்கு, பொது மக்களுக்கு அந்த இடத்திலேயே அபராதம் விதித்து டெல்லியைக் கொஞ்ச நாளில் ஒழுங்கிற்குக் கொண்டு வந்தவர். 'நோ பார்க்கிங்' இடத்தில் நிறுத்தப்பட்டிருக்கும் கார்களை கிரேன்மூலம் தூக்கிச் செல்ல இவர் நடவடிக்கையை எடுத்ததினால் கிரண் பேடியை 'கிரேன் பேடி' என்றும் சொல்வார்கள்.

''காவல் துறைக்குப் பெண்கள் வருவது வரவேற்கப்பட வேண்டும். ஒருவர் ஆணா, பெண்ணா என்பதல்ல கேள்வி. ஒவ்வொருவரின் திறமை அவரது அறிவாற்றலைப் பொறுத்திருக்கிறது. வேலையில் இருக்கும் இடர்கள், ஆபத்துக்கள் ஆண்களுக்கும் சரி, பெண்களுக்கும் சரி, பொதுவானவை. பெண் தான் பாதுகாப்பற்றவள் — பாதுகாக்கப் படத் தக்கவள் என்று நினைத்தால் அது அவளது மன இயல்பாகும்'' என்கிறார்.

இவர் மகள் சிறுநீரகக் கோளாறு சிகிச்சைக்காக டெல்லியில் இருக்க, தாய் கோவாவில் கடமையாற்றிக் கொண்டிருக்கிறார். மீண்டும் டெல்லிக்கு வந்துவிடுவோம் என்ற நம்பிக்கை அவருக்கு நிறைய இருக்கிறது.

-பிஸ்மி

## இரண்டாவது அட்டையில்

கணவன் மனைவி இருவரும் ஒருவருக்காகவே மற்றவர் படைக்கப் பட்டவர் என்று சொல்வார்கள். வருடா வருடம் இதை ஒரு போட்டியாகவே வைத்து யார் சிறந்த தம்பதி என்று தேர்ந்தெடுக்கிறார்கள் வில்ஸ்ஃப்ளேக் சிகரெட் நிறுவனத்தினர். அந்த வகையில் 84'-ம் ஆண்டின் சிறந்த தம்பதியாகத் தேர்ந்தெடுக்கப்பட்டவர்கள் திரு. ராஜகோபாலன் திருமதி லலிதா ராஜகோபாலன்.

வண்ணப்படம்: ரங்கிஸ்.

## பரதத்திற்கு ஒரு பாலா

இருபதாம் நூற்றாண்டின் இணையற்ற பரத நாட்டியக் கலைஞர் என்று போற்றப்படும் திருமதி பால சரஸ்வதி மறைவு கலை உலகிற்கே ஒரு பேரிழப்பாகும்.

''பாலசரஸ்வதியின் கலை அவரோடு அழிந்து விடும். பரதக் கலையில் ஒரு பாலா தான் இருக்கமுடியும்'' என்றார் டாக்டர் வி. கே. நாராயண மேனன்.

வீணை தனம்மாள் மகள் வயிற்றுப் பேத்தியான பால சரஸ்வதி அவர்களை ஒரு 'பரதக் கலை வித்தியாலயம்' என்றே கூறலாம். உயர்ந்த பல விருதுகளைப் பெற்ற இந்த அபிநய சரஸ்வதியைப் 'பரதத்திற்கு ஒரு பாலா' என்ற ஒரே வார்த்தையில்தான் வர்ணிக்க முடியும்.

—கே. எஸ். ராமஸ்

Edited, Printed and Published by V. Murali on behalf of Messrs Bharathan Publications Private Limited, at the Bharathan Press, Race Course Road, Guindy, Madras-600 032. (Phone: 431543)
Assistant Editor: Manjula Ramesh.

REGISTERED No. TN MS (S) 231
Registered as a Newspaper in Sri Lanka




நீங்கள் எப்போதும்
விரும்பிய
பொலிவும் வலிவும்
இப்பொழுது!

# பட்டர்ஃபிளை

## எவர்சில்வர் பிரஷர் குக்கர்

எவர்சில்வர் துறையில் 40 ஆண்டுகளுக்கும் மேல் அனுபவம் பெற்ற வல்லு-நர்களால் தயாரிக்கப்படுவது நவீன பட்டர்ஃப்ளை எவர்சில்வர் பிரஷர் குக்கர்.

- பட்டர்ஃப்ளை நீடித்த உழைப்பும் உறுதியும் கொண்டது. ஏனெனில் அது AISI : 304, non-magnetic ஸ்டீல் தகட்டினால் ஆனது.
- ஒட்டு கிடையாது. வெல்டிங் கிடையாது. பட்டர்ஃப்ளை பாதுகாப்பான பிரஷர் குக்கராக அமைய வேண்டுமென்றே, கனமுள்ள 18-கேஜ் எவர்சில்வர் கொண்டு ஒரே ஷீட்டில் வடிவமைக் கப்பட்டிருக்கிறது.
- உங்கள் தேவைகேற்ப 3, 5, 6, 7·5, 10 மற்றும் 12 லிட்டர் கொள்ளவுகளில் கிடைக்கிறது. பிரஷர் பானும் கிடைக்கும்.
- 1½ மடங்கு விரைவான சமையல்.



**பட்டர்ஃபிளை**
எவர்சில்வர் பிரஷர் குக்கர்

தயாரிப்பாளர்கள் :
கங்காதரம் என்டர்பிரைஸஸ்
147, காரப்பாக்கம் வில்லேஜ்
பழைய மகாபலிபுரம் ரோடு,
சென்னை-600 096.
போன் : 552587, 555127, 556091

30 %
எரிபொருள்
சிக்கனம்
10 வருட
உத்திரவாதம்



பட்டர்ஃபிளை — குறைந்த செலவில் உயர்ந்த தரம். உங்களுக்கும், உங்கள் உற்றார் உறவினருக்கும்

ASP GE 916